# பூம்பொழில் வாசகம்



## நான்காம் புத்தகம்






# பூம்பொழில் வாசகம்

## நான்காம் புத்தகம்

ஆசிரியர்:

**வித்துவான் ம. இராமநாதன்,**

பரி. பேதுரு உயர்நிலைப் பள்ளி, தஞ்சாவூர்

பதிப்பாசிரியர்:

**பொன்னு. ஆ. சத்தியசாட்சி, M.A., B.O.L.**

ஆண்டர்சன் உயர்நிலைப் பள்ளி, காஞ்சீபுரம்




கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்

# முன்னுரை

பூம்பொழில் வாசகம் என்ற தமிழ்ப்பாட நூல் வரிசையுள் முதல் மூன்று நூல்கள் முன்னமே வெளி வந்து பெரும் பழக்கத்தில் உள்ளன. இந்நூல் அவ்வரிசை யுள் நான்காவதாகும்; நான்காம் வகுப்புக்கு உரியது.

அரசியலார் வெளியிட்டுள்ள பாடத்திட்டத்தின்படி மிகக் கவனமாக நூல் அமைக்கப்பட்டுள்ளது. சிறார் களின் நெஞ்சத்துக்கு மகிழ்ச்சி யூட்டும் கட்டுரைகளும் கதைகளும் உரையாடல்களும் பாட்டுகளும் நிரம்பக் கிடக்கின்றன. வேண்டிய அளவுக்கு அரும்பதவுரைகள், வினாக்கள், இலக்கணக் குறிப்புகள், செய்யுள் விளக்கங் கள் தரப்பட்டுள்ளன.

ஆசிரியர்கள் இதனைப் போற்றிப் பயன்படுத்துவார் கள் என நம்புகின்றோம்.

ஆசிரியர்கள்.

## தேசீய கீதம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உத்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாகே
காஹே தவஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜய ஹே
பாரத பாக்ய விதாதா
ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே!

---

## தேசீய கீதம் : பொருள்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்;
நின் திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும்
குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும்
திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும்
உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது;
அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;
யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது;
இந்தியக்கடல் அலைகளால் செழிக்கின்றது;
அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப்
பாடுகின்றன;
இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி!

# பொருளடக்கம்

## உரையும் பாட்டும்

செய்யுள்

# 1. தமிழகம்

| | | | |
|---|---|---|---|
| நிலப்பரப்பு | அருள் | வீரம் | பண்பாடு |
| எழில் | கொடை | அஞ்சாமை | ஆற்றல் |

தமிழ் நமது தாய்மொழியாகும். அது வழங்கி வரும் நிலப்பரப்பைத் தமிழகம் என்றும் தமிழ் நாடு என்றும் கூறுவர். தமிழ் நாடு நமது தாய் நாடு. அந்நாட்டின் எல்லை தொல்காப்பியம் முதலிய தமிழ் நூல்களில் கூறப்பட்டிருக்கிறது. தமிழகத்தின் வட எல்லை திருவேங்கடம்; தென் எல்லை கன்னியாகுமரி; கீழ் எல்லை வங்கக் கடல்; மேல் எல்லை அரபிக் கடல். இத் தமிழகம் மலை, காடு, வயல், கடல் என்ற நால் வகை நலன்களையும் பெற்றுத் திகழ்கின்றது.

இவ்வாறு சிறப்புற்ற தமிழகம் முப்பெரும் பிரிவுகளாகப் பிரிந்து, சேர நாடு, சோழ நாடு, பாண்டி நாடு என்னும் பெயர்களுடன் விளங்கியது. இவைகளை முடியுடை மூவேந்தர் என்று வழங்கப்படும் சேரர், சோழர், பாண்டியர் என்பவர் ஆண்டனர். இவர்கள் ஆட்சியின் கீழ்ப் பல சிறு நிலப்பகுதிகளைச் சிற்றரசர் பலர் ஆண்டு புகழ் பெற்றனர். இவர்கள் கல்வி, அறிவு, அருள், கொடை, வீரம் ஆகிய எல்லாவற்றிலும் சீர்பெற்று விளங்கினர்கள்.

சேர நாடு இன்றுள்ள கேரள நாடே ஆகும். அந்நாட்டில் மலைவளமும் காட்டு வளமும் நிறைந்

துள்ளன. அதன் தலைநகர் வஞ்சி. தொண்டி முசிறி என்பவை அதன் துறைமுகங்களாகத் திகழ்ந்தன. கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் ஆண்ட சேரன் செங்குட்டுவனின் தம்பி இளங்கோவடிகள், சிலப்பதிகாரம் என்னும் சிறந்த நூலை இயற்றினார். அந்நூலைப் பாரதியார் 'நெஞ்சை யள்ளும் சிலப் பதிகாரம்' என்று போற்றினார்.

சோழ நாடு, மழை வரவு இல்லையாயினும் தன்னிடத்து நீர்வளம் வற்றாத காவிரியாறு பாயும் நாடாகும். நிலவளம் நிரம்பப் பெற்றதால் 'சோழ நாடு சோறுடைத்து' என்று புகழப்படும். உறையூர் புகார் என்பன அதன் தலைநகரங்களாக விளங்கின. காவிரிப்பூம் பட்டினமும் நாகப்பட்டினமும் துறை முகங்களாக விளங்கின. ஏறக்குறைய கி.பி. இரண் டாம் நூற்றாண்டில் ஆண்ட கரிகால் சோழன், உருத்திரங் கண்ணனார் என்ற புலவரை ஆதரித்துப் 'பட்டினப்பாலை' என்ற நூலைப் பாடுமாறு செய்தான்.

பாண்டி நாடு தமிழை வளர்த்த தனிப்பெருமை பெற்றுத் திகழ்வது. வையை பொருநை என்ற இரு நதிகள் பாய்வதால் இது வளமுற்றுத் திகழ் கின்றது. இதன் தலைநகர் மதுரை. சிலப்பதிகாரக் காலத்தில் கொற்கை பாண்டி நாட்டுத் துறைமுகமா யிருந்தது. பாண்டியர் மதுரையில் தமிழ்ச் சங்கம் நிறுவித் தமிழை வளர்த்தவராவர்.

தமிழகத்தை ஆண்ட பேரரசர்களும் சிற்றரசர் களும் குடிகளைத் தம் உயிர்போலக் கருதிப் பாது காத்தனர். தமிழ்ப் புலவர்களை மதித்துத் தமிழை வளர்த்தனர். தமிழ் மக்களின் அஞ்சாமை, பண்

பாடு, அறிவு, ஆற்றல் ஆகியவற்றை உலகறியுமாறு செய்தனர். இவ்வரசர்கள் ஆண்ட காலத்துத் தமிழ் நாடு உயர்வுடன் திகழ்ந்தது. நாமும் பண்பாடுடையவர்களாய் வாழ்ந்து நமது நாட்டை உயர்வடையச் செய்து புகழ் பெறுவோமாக.

### அருஞ்சொற் பொருள்

அருள் = தொடர்பு இல்லாதவரிடம் காட்டும் அன்பு; பொருநை = தாமிரவருணி.

### வினாக்கள்

1. தமிழ் நாட்டின் எல்லைகள் யாவை?
2. சோழ நாட்டின் தனிச் சிறப்பு யாது?
3. சேர நாட்டின் தலைநகரமும், துறைமுகங்களும் எவை?
4. தமிழரசரின் தனிப்பெரும் பண்புகளை எழுதுக.
5. முடியுடை மூவேந்தர் எவர்?

### இலக்கணம்

1. வாக்கியம்.

தமிழ் நாடு நம் தாய்நாடு.—இவ்வாறு சொற்கள் பல தொடர்ந்து கருத்து முடிவுற்று நிற்பது வாக்கியம் அல்லது முற்றுச் சொற்றொடர் ஆகும்.

2. வாக்கியம் ஆக்குக.

(i) வஞ்சி சேர நாட்டின்............

(ii) சோழ நாட்டின் தலைநகரங்களாக...........

(iii) தமிழகத்தின் வட எல்லை...........

# 2. நாணலும் அரச மரமும்

காட்சி
நகைத்தது
அற்பம்
புயல்காற்று
செருக்கு
அண்மை
வலிமை
வாளா
பணிவு
வாழ்க்கை

ஓர் ஆற்றின் கரையில் அரச மரம் ஒன்று ஓங்கி வளர்ந்திருந்தது. அதன் பக்கத்தில் நாணல் புல் தொகுதியாகக் காட்சி அளித்தது.

காற்று மிக மென்மைத் தன்மையுடன் அடித்தாலும் நாணல் சாய்ந்து கொடுக்கும். ஆனுல் அரச மரமோ அசையாமலும் சாயாமலும் நிமிர்ந்தே நிற்கும்.

ஒருநாள், சிறு காற்று அடித்ததும், நாணல் அசைவதைப் பார்த்து அரச மரம் நகைத்தது.

அரசமரம்: நாணலே! சிறு காற்று அடித்தாலும் சாய்ந்து வணக்கம் செலுத்துகிருயே. என்னேப் பார்! நான் இந்த அற்பக் காற்றுக்கெல்லாம் வணங்கமாட்டேன். இதிலிருந்து என் ஆற்றலேயும் உறுதியையும் தெரிந்துகொள்.

நாணல்: அரச மரமே! உன்னேப்போன்ற வலிமை என்னிடம் அமைய வில்லே. பெருமையுடையவர்கள் பணிவுடையவர்களாகவே விளங்குவார்கள். பணிய வேண்டும் நேரத்தில் பணிந்தே ஆக வேண்டும். இல்லாவிட்டால் வாழ்க்கையில் மிகவும் துன்பப்பட நேரிடும். வலிமை மட்டும் இருந்து பயன் அடைய முடியுமா?

அரசமரம்: நாணலே! நீயோ அற்பமான சிறு புல். நீ என்னைச் சார்ந்து மிக அண்மையில் இருப்பதே எனக்கு மிகவும் வெட்கமாய் இருக்கிறது.

இச் சொற்களைக் கேட்ட நாணல் ஒன்றும் எதிராகப் பேசாமல் வாளா இருந்துவிட்டது.

ஒருநாள் பெரும்புயல் வீசியது. அக்காற்றில் பெரிய மரங்கள் வேரோடு சாய்ந்தன. அரசமரத்தினால் அக்காற்றின் வேகத்தைத் தாங்கி நிற்க முடியவில்லை; வேரோடு சாய்ந்து தரையில் வீழ்ந்தது. நாணலோ அந்தப் பெரும் புயல் காற்றில்கூட வளைந்து வளைந்து ஆடிப் பின் நிமிர்ந்து நின்றது. அது, வேரோடு சாய்ந்து கிடக்கும் அரசமரத்தைப் பார்த்து வருந்தியது. அரச மரமோ, தன் செருக்கை எண்ணி நாணமுற்றுப் புலம்பியது.

இதனால் மாணவர்களே! ‘பணிவே பெருமை தரும்; செருக்குச் சீர் அழியச் செய்யும்’ என்ற நீதியை உணர்ந்து பின்பற்றி உயர்வீராக.

அருஞ்சொற் பொருள்

*நகைத்தது = சிரித்தது; அண்மை = பக்கம்; வாளா = ஒன்றும் பேசாமல்; செருக்கு = தன்னைத்தானே சிறப்பாக மதிக்கும் இயல்பு. சீர் = சிறப்பு.*

வினாக்கள்

1. *அரச மரமும் நாணலும் எவ்விடத்தில் இருந்தன?*
2. *அரச மரத்திற்கும் நாணலுக்கும் இடையே ஏற்பட்ட உரையாடலை எழுதுக.*
3. *புயல் காற்றில் அரச மரம் என்நிலையுற்றது?*
4. *இக்கதையினால் நீ அறியும் நீதி யாது?*

இலக்கணம்

கீழே கொடுக்கப்பட்டிருக்கும் வாக்கியங்களிலுள்ள பெயர்ச் சொற்களை எடுத்தெழுதுக.

[ஒரு பொருளின் பெயரைக் குறிப்பது பெயர்ச் சொல்.]

1. ஓர் ஆற்றின் கரையில் அரச மரம் ஒன்று ஓங்கி வளர்ந்திருந்தது.

2. ஒரு நாள் பெரும் புயல் காற்று வீசியது.

# 3. பாவலர்க்குச் சாமரை வீசிய காவலன்



| | | | |
|---|---|---|---|
| முறை | புள்ளினம் | சோர்வு | துயில் |
| பாவலர் | கேண்மை | ஒறுத்தல் | புல்லி |
| காவலர் | கோயில் | வியப்பு | தமிழ்ப்பற்று |

சேர நாட்டை யாண்ட அரசர்களுள் பெருஞ் சேரல் இரும்பொறை என்பவர் ஒருவர் ஆவர்.

அவர் கடையெழு வள்ளல்களுள் ஒருவரும், தகடூர் என்னும் நாட்டை ஆண்டுவந்தவருமான அதிய மானைப் போரில் வென்றார். தகடூரையும் அழித் தார். அதனால், 'சேரமான் தகடூர் எறிந்த பெருஞ் சேரல் இரும்பொறை' என்னும் வெற்றிப் பெயரை யும் பெற்றார். அவர் முறை வழுவாது ஆண்டவர்; வரையாது வழங்கும் வள்ளல்; பாவலர்களை ஆதரித்த காவலர்; பைந்தமிழைப் போற்றிய பண்புடை அரசர்.

கொடையில் சிறந்தோரின் புகழ் எங்கும் பரவு வது இயல்பே. இரும்பொறையின் புகழும் எங்கும் பரவியதால், பழுத்த மரங்களை நாடிச் செல்லும் புள் ளினம் போலப் புலவர் பலர் அவரை அடைந்து, பாக்கள் பாடிப் பரிசில் பெற்றுச் சென்றனர். அவ் வாறு சென்ற புலவர்களுள் மோசிகீரனாரும் ஒருவர். அவர் பாண்டி நாட்டினர். அறிவுரை நல்கும் பாக்கள் பல இயற்றியுள்ளார். 'மக்கள் வாழ நெல் லும் நீரும் இன்றியமையாதவை. ஆனால் மக்க ளுக்கு உண்மையாக நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்று. அவைகளைப் பெற்று மகிழ வகை செய்யும் முறை தவறாத மன்னனே உயிர் ஆவான்' என்ற கருத்துடைய செய்யுள் இப்புலவர் இயற்றியதே.

இப்புலவரின் நுண்ணறிவைக் கண்டு வியப் புற்ற இரும்பொறை, அவரிடம் நட்புக்கொண்டார். ஆதலால், அவர் அடிக்கடி அரசர் அவைக்குச் சென்று, நல்லறிவுரைகளைப் புகட்டி, மன்னனை மனமகிழச் செய்வது வழக்கமாயிற்று.

ஒருநாள் மோசிகீரனுர் மிகத் தொலேவிலிருந்து மன்னரைக் காணவந்தார். அவ்வமயம் மன்னர் கோயிலில் இல்லே. அவரது வரவை எதிர்பார்த் திருந்த புலவர் நெடுந்தொலேவு நடந்த களேப்பால், அங்கிருந்த அழகு மிக்க ஒரு கட்டிலின் மீது ஏறிப் படுத்தார். சோர்வின் மேலீட்டால், அவர் தாம் ஏறிப் படுக்கும் கட்டிலின் இயல்பை ஆராயவில்லே. படுத்தவர் உடனே உறக்கத்தில் ஆழ்ந்தார்.

புலவர் உறங்கிய கட்டில் அரசர்க்குரிய வீர முரசம் வைக்கப்படும் முரசு கட்டிலாகும். வீரமுரசம் என்பது காவலரின் மதிப்புக்கும் பணிவுக்கும் உரியது. அதனேச் சில குறிப்பிட்ட நாட்களில் நீராட்டுவர். அதற்கு மாலே சூட்டுவர்; உணவு படைப்பர். கடைசியாக, அதனே அழகிய வெண் மெத்தை போடப்பட்ட கட்டிலில் வைத்து வணங்கு வர். இவ்விழாவிற்கு அரசரும் உடனிருப்பர்.

ஆதலால், அரசர் அக்கட்டிலே அரியணேக்கு ஒப்பாக மதிப்பர். அரசனேத் தவிர்த்து, அரியணே யைப் பயன்படுத்துவோன் அடையும் தண்டனேயே முரசுகட்டிலேப் பயன்படுத்துவோனுக்கும் விதிக்கப் படும். இச்செய்திகளே நம் புலவர் நன்கு அறிவர். அறிந்திருப்பினும், சோர்வின் மிகுதியால் தாம் ஏறிப் படுத்தது முரசு கட்டில் என்பதைக் கவனிக்க வில்லே. இவர் வந்த அவ்வமயம் முரசு நீர்த் துறைக்குச் சென்றிருந்தமையால் கட்டிலும் காலியா யிருந்தது.

முரசத்தை நீராட்டிக்கொண்டு வரும்போது, கட்டிலில் யாரோ ஒருவர் துயிலுவதை அரசர்

கண்டார்; சினம் கொண்டார்; வாளை உருவிக் கொண்டு அருகிற் சென்றார். உடனிருந்தோர் திகைத்தனர். ஆனால் ஓங்கிய கை தளர்ந்தது! உறங்குகின்றவர் மோசிகீரனார் என்பதை அறிந்த அரசர் கவரி கையில் காட்சியளிக்கப் புலவர் உடல் குளிர வீசினார். அங்கிருந்தோர் அனைவரும் அசை வற்று வியப்புணர்ச்சியோடு நின்றனர்.

புலவரும் துயிலுணர்ந்தார். ஒரு பக்கம் அரசர் தமக்குச் சாமரை வீசுவதையும் ஒரு பக்கம் வீரமுரசம் இருப்பதையும் கண்டு திகைத்தார்; பிழையை உணர்ந்தார். அப்பிழைக்குத் தம்மைக் கொல்லாமல் விடுத்ததும் அல்லாமல்,கவரி கொண்டு வீசிய நிலையைக் கண்டு மனம் உருகிப் பேசாது நின்றார். நின்ற பாவலரைக் காவலர் அன்புடன் இறுகப் புல்லி, 'அறிஞரே! சோர்வு அடைந்தமை யால் உறங்கினீர் போலும்!' என்று ஆதரவாகப் பேசினார்.

அச் சொற்களைக் கேட்ட புலவர் 'அரசர் ஏறே! யான் செய்த குற்றத்தைப் பொறுத்ததோடன்றி, சாமரையும் வீசி நின்றீர். நும் தமிழ்ப் பற்றன்றோ இச்செயலாற்றக்காரணமாயிற்று. நும் புகழ் என்றும் நின்று நிலவுக' என்று வாழ்த்தினார்.

இரும்பொறை இனிய தமிழின்பால் கொண்ட அளவற்ற பற்றினால் மன்னிக்க முடியாத குற்றம் செய்த புலவரை மன்னித்தார். நீவிரும் தமிழ்ப் பற்று உடையீராய் வாழ்ந்து உயர்வு அடைவீராக.

## அருஞ்சொற் பொருள்

புள்ளினம் = பறவைக் கூட்டம்; புல்லி = தழுவி; கோயில் = அரண்மனே; முறை = நீதி; துயிலுணர்ந்தார் = எழுந்தார்.

## வினக்கள்

1. சேர நாட்டை ஆண்டவர் யார்? அவர்க்குரிய வெற்றிப் பெயர் யாது?

2. மோசிகீரனுர் என்பவர் யார்?

3. புலவர் செய்த பிழை யாது?

4. 'முரசு கட்டில்' என்ருல் என்ன? அதன் சிறப்பு யாது?

5. புலவர் செய்த பிழையை அரசர் அறிந்து என்ன செய்தார்? ஏன் அவ்வாறு செய்தார்?

6. இப்பாடத்தால் நீவிர் அறிவது என்ன?

## இலக்கணம்

1. மன்னன் சேரன் என்னுஞ் சொற்கள் ஆண்பாலேக் குறிக்கின்றன. ஆகையால் அவை ஆண்பால் பெயர்ச் சொற்கள்.

2. அரசி என்னும் சொல் பெண்பாலேக் குறிக்கும். ஆகையால் அது பெண்பால் பெயர்ச் சொல்.

3. ஆடவர் ஏவலாட்கள் என்னும் சொற்கள் பலரைக் குறிக்கின்றன. ஆகையால் அவை பலர்பால் பெயர்ச் சொற்கள்.

கீழே உள்ள சொற்களே ஆண்பால் பெயர்ச்சொல், பெண்பாற் பெயர்ச்சொல், பலர்பாற் பெயர்ச்சொல் என்ற தலைப்புகளின் கீழ் வரிசைப்படுத்து:—

இராமன், முருகன், வள்ளி, கந்தன், மனேவி, மாணவர்கள், காவற்காரி, ஏவலாளர், பணியாளர், இல்லாள்.

# 4. இளங்கோவின் துறவு

[நாடகக் காட்சி]

| | | | |
|---|---|---|---|
| வாகை | நாற்றம் | மெய்ப்பாடு | குறிக்கோள் |
| அரியாசனம் | மெய் | மரபு | அரசிருக்கை |
| சினம் | ஆசி | செவ்வனே | ஒளியாது |

**களம்:** சேரர் தலைநகரான வஞ்சியில் சேர மன்னனின் அரசிருக்கை.

**காலம்:** முற்பகல்.

**பாத்திரங்கள்:** இமய்வரம்பன் நெடுஞ்சேரலாதன், அவன் மூத்த மைந்தன் செங்குட்டுவன், இளைய மைந்தன் இளங்கோ, அமைச்சர், படைத் தலைவர், நிமித்திகர்.

[சேரமன்னன் சிங்கம் சுமந்த இருக்கையில் வீற்றிருக்கின்றான். வலப்பக்கம் மூத்த மகனும், இடப்பக்கம் இளைய மைந்தனும் வெவ்வேறு இருக்கைகளில் அமர்ந்துள்ளனர்.. மற்றவர்கள் தத்தமக்குரிய இடங்களில் இருக்கின்றார்கள்.]

**இமயவரம்பன்:** அறிவுடை அமைச்சர்களே! வாகை சூடும் வீரர்களே! சில நாட்களாய் எம் மனத்தில் சில நினைவுகள் தோன்றி இன்பம் ஊட்டுகின்றன. அவற்றைக் கூற விரும்புகின்றோம்.

**அமைச்சர்:** அவ்வெண்ணங்கள் யாவையோ? வெளியிட்டால் யாமும் கேட்டு மகிழ்வோமே! ஆதலால் உடனே கூறுமாறு வேண்டுகின்றோம்.

இமயவரம்பன்: அவ்வாறே. கடவுள் அருள், உமது அறிவுச் சிறப்பு, படைத் தலைவரின் வீரம் என்ற இவைகளால், யாம் அரியாசனம் ஏறிய நாள் முதல் இதுவரை யாவற்றிலும் வெற்றியே கண்டோம். தமிழ் நாட்டை ஒரு குடைக் கீழ் ஆளும் நாம் வட நாட்டிலும் புகழைப் பரப்பி இமயத்திலும் விற்கொடியைப் பொறித்தோம்! வெற்றி புகழ் என்ற இவ்விரண்டையும் அடைந்த எமக்கு, இனி முடிவில்லாத இன்பம் தரும் வீடு தேடும் நோக்கம் தோன்றியுள்ளது. ஆதலால், மேல் ஆக வேண்டுவது என்ன?

ஓர் அமைச்சர்: அரசர்க்கரசே! நும் கூற்று வரவேற்கத் தக்கதே. அருள், வலிமை, கல்வி, கொடை என்ற குண மேன்மைகளோடு விளங்கும் மூத்த மைந்தன் செங்குட்டுவற்கு இளவரசுப் பட்டம் கொடுத்தது முதல் பொன் மலர் நாற்றம் பெற்றாற்போல, நாடு முன்னேறிக்கொண்டு வருகின்றது. சான்றோரான இளங்கோ அமைச்சர் தலைவராய் அரசியற் காரியங்களைச் செவ்வனே செய்து வருகின்றார். ஆதலால், அரசியலைப் பற்றிச் சிறிதும் கவலை வேண்டுவதில்லை. எனினும், சில ஆண்டுகள் நீரே ஆள வேண்டுமென்பதே எமது விருப்பமும், நும் மக்களின் எண்ணமும் ஆகும்.

[வாயிலோன் வந்து அரசனை வணங்குகின்றான்.]

இமயவரம்பன்: வாயிலோயே! ஏதேனும் சிறப்புச் செய்தி உள்ளதோ?

வாயிலோன்: அரசே! வாழ்க! வணக்கம்! சோழ நாட்டுச் சோதிடர் ஒருவர் தங்களைக் காண விரும்புகிறார்.

இமயவரம்பன்: வரவிடுக.

[காவலன் செல்கிறான், சோதிடர் அரசர்முன் வருகின்றார்.]

சோதிடர்: எட்டுத் திசையும் புகழ் மணக்கும் சேர நாட்டுக் காவலரே! நுமக்கு நன்மை பெருகுக!

இமயவரம்பன்: தேவரீர்! வருக. (ஓர் இருக்கையைக் காட்டி) இதில் இரும். நீர் சோதிடர் என்பதைக் காவலன் கூற அறிந்தோம். மெய்தானே?

சோதிடர்: அரசே! ஆம். உடல் அமைப்பைப் பார்த்தே எதிர்காலத்தை அறிந்து கூறும் ஆற்றல் உடையேன் யான்.

இமயவரம்பன்: இது முன் கேட்டறியாத செய்தி! நன்று நன்று! நாம் இவ்வரசாட்சியில் எவ்வளவு நாள் இருக்க வேண்டும்?

சோதிடர்: அரசே, அவ்வாறே கூறுகின்றேன்.

[சிறிது நேரம் ஒன்றும் பேசாமல் எண்ணத்தில் ஆழ்ந்தார்.]

இமயவரம்பன்: சோதிடரே! யோசிப்பது ஏன்? உண்மையை ஒளியாது மனக் கலக்கம் இன்றிக் கூறும்.

சோதிடர்: உம்மை நோக்கின், கடவுள் அருள் பெற நீங்கள் நெடுங்காலம் காக்க வேண்டா வென்று தெரிகிறது.

இமயவரம்பன்: சோதிடரே! இதனை யாம் அக மகிழ்ச்சியோடு வரவேற்கின்றோம். சற்று முன்பு இதைப்பற்றியே நாங்களும் உரை யாடிக் கொண்டிருந்தோம். நிற்க, (மூத்த மகனைச் சுட்டி) இதோ வீற்றிருப்பவன் எம் மூத்த மகன் செங்குட்டுவன். (இளைய மைந்தனைச் சுட்டி) இவனே எம் இரண்டாம் மகன் இளங்கோ. இவ்விருவரையும் பற்றிக் கூறுக.

சோதிடர்: (அவ்விரு மைந்தர்களையும் மாறிமாறி உற்று நோக்கியபின்) சேர நாடாளும் மன்னரே! இவ்விருவருள் அரசாட்சியைப் பெறப்போகின்றவர் மூத்தவர் அல்லர்! இளையவரே!

[மன்னன் வியக்க, ஏனையோர் ஆச்சரியம் அடை கின்றனர். செங்குட்டுவன் முகம் மாறியது; மன்னன், சோதிடர், இளங்கோ என்ற மூவரையும் மாறி மாறிப் பார்க்கிறான். இம்மெய்ப் பாட்டைக் கண்ணுற்ற இளங்கோ எழுந்தார்.]

இளங்கோ: சோதிடரே! மூத்தவன் இருக்க இளைய வன் அரசைக் கைக்கொள்வது தமிழ் நாட்டு மரபன்று. சேர நாட்டில் எக்காலத்திலும் இல்லை. அறத்திற்கு மேலான கலை உள்ளதா? உமது சோதிடம் பொய்க்கும். உமது மொழி யால் என் தந்தைக்கு ஏற்பட்ட கலக்கம், என்

அண்ணன் அடைந்த சினம், அவையோரின் அச்சம் என்ற இவைகளை உடனே போக்கு வேன்.

கடவுள்மீது ஆணை! அறக்கடவுளே இதற்குச் சாட்சி!

என் தந்தை ஆறுதல் அடைய, அண்ணன் அகமகிழ, அவையோர் ஆசிகூற யான் இன்றே—இப்பொழுதே—துறவை மேற்கொள்கின்றேன். குணவாயிலில் உள்ள கோவிலே என் இருப்பிடம். இதுவே உறுதி.

சோதிடரே! நீர் கூறியது ஒருவகையில் மெய். இதுவரை இளவரசனாய் இருந்தேன். இன்று முதல் தவத்தின் அரசன் ஆனேன். வணக்கம். இதோ செல்கிறேன்.

[அவையை விட்டு வெளியேறுகிறார்.]

அருஞ்சொற் பொருள்

வாகை = வெற்றி; நாற்றம் = மணம்; மெய்ப்பாடு = உள்ள உணர்ச்சி; ஆசி = வாழ்த்து.

வினாக்கள்

1. இமயவரம்பன் அவையில் அமைச்சரிடம் கூறியது என்ன?

2. சோதிடரிடம் அமைந்த தனித்த ஆற்றல் யாது?

3. அரசர் சோதிடரை நோக்கிக் கூறியது என்ன? அதற்கு அவர் இறுத்த விடை யாது?

4. இளங்கோ துறவு பூண்டது ஏன்?

## இலக்கணம்

1. இளங்கோ எழுந்தார்.
2. இதோ செய்கிறேன்.
3. கந்தன் பாடுகிறான்.
4. மாடு மேய்கிறது.

எழுந்தார், செய்கிறேன், பாடுகிறான், மேய்கிறது என்பன தொழிலைக் காட்டுஞ் சொற்கள். தொழிலைக் காட்டும் சொல் வினைச்சொல்.

கீழ்வரும் வக்கியங்களிலுள்ள வினைச் சொற்களை எடுத்து எழுதுக:—

1. மாடுகள் ஓடின.
2. துறவை மேற்கொண்டான்.
3. சோதிடன் கூறினான்.
4. இளங்கோ துறந்தார்.

கோடிட்ட இடங்களில் தகுந்த வினைச் சொற்கள் அமைக்க:—

1. குழந்தை ________
2. வீரர்கள் ________
3. பூனை ________
4. நாங்கள் ________
5. அவர்கள் ________

# 5. ஒற்றுமை

1. தெய்வம் பலபலச் சொல்லி—பகைத்
 தீயை வளர்ப்பவர் மூடர்;
உய்வதனைத்திலும் ஒன்றாய்—எங்கும்
 ஓர் பொருளானது தெய்வம்.

2. யாரும் பணிந்திடும் தெய்வம்—பொருள்
 யாவினும் நின்றிடும் தெய்வம்;
பாருக்குள்ளே தெய்வம் ஒன்று—இதில்
 பற்பல சண்டைகள் வேண்டா.

3. வண்ணங்கள் வேற்றுமைப் பட்டால்—அதில்
 மானுடர் வேற்றுமை இல்லை;
எண்ணங்கள் செய்கைகள் எல்லாம்—இங்கு
 யாவர்க்கும் ஒன்றெனக் காணீர்!

4. அன்பென்று கொட்டு முரசே—மக்கள்
 அத்தனை பேரும் நிகரே;
இன்பங்கள் யாவும் பெருகும்—இங்கு
 யாவரும் ஒன்றென்றே கண்டால்.

—பாரதியார்.

அருஞ்சொற் பொருள்

யாவினும் = எல்லாப் பொருள்களிலும். வண்ணம் = நிறம்.

வினாக்கள்

1. கடவுள் எங்குள்ளார்?

2. இன்பங்கள் பெருக வழி யாது?

# 6. சுகுமாரனும் அவன் நண்பனும்

| | | |
|---|---|---|
| உரிமை | பிடிக்க | இரகசியம் |
| அஞ்சி | விழுங்கியது | மகிழ்ந்தனர் |
| உபாயம் | குலுங்க | மகவு |

ஓர் ஊரில் சுகுமாரன் என்னும் வணிகன் ஒருவன் இருந்தான். அவன் பணம் தேட ஆசை கொண்டு வேறு நாட்டிற்குச் செல்ல விரும்பினன். அவனிடம் இரும்புக் கம்பிகள் ஏறக்குறைய ஆயிரம் இருந்தன. அவைகளைத் தன் நண்பன் வீட்டில் வைத்துவிட்டுச் செல்லலாம் என்று முடிவு செய்து, அவன் வீட்டை அடைந்து, 'நண்பா! நான் வேற்று நாடு சென்று வாணிபம் செய்ய எண்ணியிருக்கிறேன். நான் திரும்பி வரும்வரை இவற்றை வைத்திரு. நான் வந்தவுடன் திரும்பப் பெற்றுக்கொள்கிறேன்' என்றான். அதற்கு நண்பனும் 'சரி, இருக்கட்டும்' என்றான்.

சுகுமாரன் தான் சென்ற புதிய நாட்டில் பல ஆண்டுகள் தங்கியும், மிகுதியாகப் பொருள் தேட முடியவில்லை. ஆதலால் ஊருக்கே திரும்பி இரும்புக் கம்பிகளை விற்றுப் பொருள் திரட்டலாம் என்று முடிவு செய்தான். மீண்டு வந்து நண்பன் வீட்டை அடைந்து இரும்புக் கம்பிகளைத் திரும்பத் தருமாறு கேட்டான். அக்கம்பிகளைத் தனது உரிமையாக்கிக்கொள்ள விரும்பிய நண்பன் 'நண்பா! நீ கொடுத்த இரும்புக் கம்பிகளை நான்

கவனியாமல் இருந்துவிட்டேன்; வருவதற்குச் சற்றுமுன் போய்ப் பார்த்தேன். எலிகள் அவைகளைக் கடித்துத் தின்றுவிட்டன,' என்று சொன்னான்.

உடனே சுகுமாரன் அஞ்சித் தன் மனத்தில் 'அந்தோ! என்ன அநியாயம். இவன் முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பதுபோலப் பொய் பேசி முதலுக்கே மோசம் செய்கின்றானே. பொய் கூறினாலும் பொருந்தக் கூற வேண்டாவா? நான் ஓர் உபாயம் செய்கிறேன்' என்று எண்ணினான். அவனை நோக்கி, 'எலிகள் தின்றதற்கு நீ என்ன செய்வாய்; நான் சென்று வருகிறேன்' என்று விடை பெற்றுச் சென்றான்.

பிறகு ஒருநாள், தன் நண்பனின் மகன் தெருவில் விளையாடிக் கொண்டிருப்பதைச் சுகுமாரன் பார்த்தான். அக்குழந்தையை எடுத்துக் கொண்டு போய் மற்றொரு வீட்டில் மறைத்து வைத்தான். சுகுமாரன் குழந்தையை எடுத்துச் சென்றதை அறிந்த நண்பன் அவனிடம் சென்று 'நீ எடுத்துச் சென்ற குழந்தை எங்கே' என்று கேட்டான். அதற்கு அவன் 'நான் உன் குழந்தையை எடுத்துச் சென்றபொழுது பெரிய பருந்து திடீரென்று பாய்ந்து பிள்ளையைத் தூக்கிச் சென்றது. ஓடிப் பிடிக்க முயன்றும் முடிய வில்லை' என்று கூறினான்.

உடனே அவன் 'குழந்தையைப் பறவை தூக்கிச் செல்லுமா? இது வெறும் பொய்' என்றான்; சண்டையிட்டான். இருவரும் ஊர்த் தலைவனிடம் சென்றனர். சுகுமாரனின் நண்பன் நிகழ்ந்ததைக் கூறினான்.

ஊர்த் தலைவன் சுகுமாரனைப் பார்த்து: ‘இவனுடைய குழந்தை எங்கே?’ என்று கேட்க, சுகுமாரன் ‘ஒரு பருந்து அவனைத் தூக்கிச் சென்றது’ என்ருன். தலைவன் நகைத்து ‘ஏன் பொய் சொல்லுகிருய்?’ என்ருன். அதற்குச் சுகுமாரன் ‘இரும்புக் கம்பிகளை எலி விழுங்கியதுபோலவே பிள்ளையைப் பருந்து தூக்கிச் சென்றது. இதில் என்ன வியப்பு?’ என்று விடை கூறினன்.

ஊர்த் தலைவன் ‘எலி எப்பொழுது இரும்புக் கம்பிகளை விழுங்கியது. விளக்கமாகக் கூறு’ என்ருன். உடனே சுகுமாரன் நடந்தவற்றை விளக்கமாகக் கூறினன். ஊர்த் தலைவன் வயிறு குலுங்க நகைத்து, ‘ஓ! இரகசியம் இதுவா! வாதியே! இரும்புக் கம்பிகளைக் கொண்டுவா. பிள்ளை உனக்குக் கிடைக்கும்’ என்ருன்.

வேறு வழியின்றி சுகுமாரனின் நண்பன் இரும்புக் கம்பிகளைக் கொண்டுவந்தான். சுகுமாரனும் மறைத்து வைத்த மகவை அளித்தான். இருவரும் தம் பொருள்களைப் பெற்று மகிழ்ந்தனர்.

அருஞ்சொற் பொருள்

*விளக்கமாக = தெளிவாக; மகவு = குழந்தை; அஞ்சி = பயந்து; நகைத்து = சிரித்து.*

வினக்கள்

1. *சுகுமாரன் நண்பனிடம் இரும்புக் கம்பிகளைக் கொடுத்தது ஏன்?*

2. *சுகுமாரன் தான் சென்ற நாட்டைவிட்டுத் திரும்பியதற்குக் காரணம் என்ன?*

3. சுகுமாரன் திரும்பி வந்து கம்பிகளைக் கேட்ட போது நண்பன் கூறியது என்ன?

4. இரும்புக் கம்பிகளைப் பெறச் சுகுமாரன் செய்த உபாயம் யாது?

இலக்கணம்

1. ழ, ள, ல இவைகளை நன்கு ஒலித்துப் பார்.

2. 'ழ' கரத்தைக் கொண்ட நான்கு சொற்கள் எழுது.

வீட்டிற்குச் சென்றான் 'கு' இடைச்சொல். இருவரும் ஊர்த் தலைவனிடம் சென்றனர். 'உம், இடம், அர்' இவை இடைச் சொற்கள். தனித்து வாராமல் பெயர்ச் சொல்லையும் வினைச் சொல்லையும் ஒட்டி வருவது இடைச் சொல்.

கீழ்வரும் வாக்கியங்களிலுள்ள இடைச்சொற்களை எடுத்து எழுது:—

1. வேறு நாட்டிற்குச் செல்ல விரும்பினான்.

2. அக்குழந்தையை எடுத்துக்கொண்டுபோய் மற்றொரு வீட்டில் மறைத்து வைத்தான்.

3. இருவரும் தம் பொருள்களைப் பெற்று மகிழ்ந்தனர்.

# 7. இளந்தமிழனுக்கு

தமிழன் என்ற பெருமையோடு
தலைநிமிர்ந்து நில்லடா!
தரணி யெங்கும் இணையிலாஉன்
சரிதைகொண்டு சொல்லடா!

அமிழ்தம் என்ற தமிழினோசை
அண்டமுட்ட உலகெலாம்
அகில தேச மக்கள்கண்டு
ஆசைகொள்ளச் செய்துமேல்

தமிழ் மணத்தின் தமிழில் மற்ற
நாட்டிலுள்ள கலையெலாம்
கட்டி வந்து தமிழர்வீட்டில்
கதவிடித்துக் கொட்டியே

நமது சொந்தம் இந்த நாடு
நானிலத்தில் மீளவும்
நல்ல வாழ்வு கொள்ளச் சேவை
செய்துவாழ்க நீண்டநாள்.

—கவிஞர் இராமலிங்கம் பிள்ளை.

அருஞ்சொற் பொருள்

தரணி, நானிலம் = பூமி; அண்டம் = உருண்டை; கமழ் = மணம் வீசுகின்ற; இணை இலா = ஒப்பு இல்லாத; கலை = கல்வி, சாஸ்திரம், சிற்பம், விஞ்ஞானம் என்பன; அகிலம் = எல்லாம்; சேவை = தொண்டு.

வினாக்கள்

1. தமிழர் செய்ய வேண்டிய பணிகள் யாவை?

2. தமிழர் சிறப்படைய பின்பற்ற வேண்டுவனவற்றை எழுதுக.

3. தமிழ் மொழியின் தனிப் பெருமை யாது?

# 8. நான் கண்ட நல்லிடங்கள்

| | | |
|---|---|---|
| ஆண்டு | காட்சி | பொங்குகின்றது |
| இறுதித் தேர்வு | புதுமை | இயற்கை |
| அறநிலையம் | மாளிகை | வெப்பம் |
| | பந்தயத் திடல் | |

நான் சென்னையின் பகுதியான இராயர்புரத்திலுள்ள தூய பேதுரு உயர்நிலைப் பள்ளியில் கல்வி கற்கிறேன். எமது பள்ளித் தலைமையாசிரியரின்

திட்டத்தின்படி, ஏப்பிரல் மாதத்தில் ஆண்டு இறுதித் தேர்வு முடிந்தவுடன் நானும் என்னுடன் பயிலும் நண்பர் முப்பது பேரும் நீலகிரியைச் சுற்றியுள்ள இடங்களுக்குப் போய் இயற்கைக் காட்சிகளையும், ஊர்களையும் கண்டு மகிழ்ந்தோம். மூன்று ஆசிரியர்கள் எங்களோடு வந்து சிறந்த காட்சிகளைக் காட்டியும் புதுமையானவற்றைத் தெரிவித்தும் மகிழ்வித்தார்கள்.



தோதவர்

நீலகிரியை எண்ணும்போதே என் மனத்தில் மகிழ்ச்சி பொங்குகின்றது. அங்கு நான் கண்டன

வற்றை நினைக்கும்போதே அவைகள் எதிரில் வந்து நிற்கின்றன. நீலகிரியைச் சார்ந்த குன்னூர், உதகமண்டலம் ஆகிய இடங்களில் நான் பார்த்து மகிழ்ந்தனவற்றை என் நண்பர்களும் கேட்டு மகிழ்வார்கள் என்று எண்ணுகிறேன்.



மலைப் புகைவண்டி குகைக்குள் செல்லும் காட்சி

நாங்கள் கோயம்புத்தூரிலிருந்து புகைவண்டியிலேறி மேட்டுப்பாளையத்தைச் சென்று அடைந்தோம். அங்கிருந்து உதகமண்டலம் இருபத்திரண்டு கல் தொலைவில் உள்ளது. நாங்கள் புகை

வண்டியில் செல்லும்போதே இயற்கைக் காட்சி களைக் கண்டு மகிழ்ந்துகொண்டே சென்ளும். இறுதியில் குன்றூரை அடைந்தோம். இது நீலகிரிப் பகுதியில் சிறந்த இடமாகும். இதன் உயரம் 6,000 அடி. அங்குக் கிறித்துவருடைய அறநிலையங்கள் பல நடைபெறுகின்றன. தொழிற் சாலைகளும், பள்ளிக்கூடங்களும் உள்ளன. அவ் வூரில் படகர் தோதவர் என்னும் பழங்குடி மக்கள் வாழ்கின்றனர். அங்குக் குளிர்ச்சி மேலீட்டால் நெய்போல் தேங்காய் எண்ணெய் உறைவதைக் கண்டு பெருவியப்படைந்தோம். அங்குத் தயிர் புளிப்பதில்லை.

குன்றூரிலிருந்து புகைவண்டியில் ஏறி உதக மண்டலம் வந்தோம். அங்குக் குதிரைப் பந்தயத் திடல், ஏரிக் காட்சி என்பன மிகவும் இன்பமளித் தன. மலைச்சாரலின் ஒரு புறம் அரசாங்க மாளிகை யும், மற்றொரு புறம் 'தொட்டபெட்டா' என்னும் உயர்ந்த சிகரமும் காணப்படுகின்றன. காப்பி, தேயிலை, சின்கோனா, உருளைக் கிழங்கு ஆகியவை அங்கு மிகுதியாய் விளைகின்றன.

நல்ல மழையும் பெய்கிறது. இவ்வூரில் சென்னை மாநில அமைச்சர்கள் முதலிய அதிகாரிகள் வெப்பம் மிக்க கோடைக் காலத்தில் வந்து தங்குவ துண்டு. இதற்காகவே, அரசாங்க மாளிகை ஒன்று இருக்கிறது.

பொதுவாக, நீலகிரியின் அழகு வியகத் தக்கது. சிறப்பாக நீலகிரி மலைத் தொகுதியைத் 'தென்னாட் டின் இயற்கைக் களஞ்சியம்' எனலாம். இம்மா

வட்டத்தில் ஐரோப்பியர் பலர் தோட்டங்கள் அமைத்துப் பயிர்த் தொழில் செய்கின்றனர். இத் தகைய செழிப்பு மிக்க இடங்களைக் கண்டு எல்லா ரும் மகிழ வேண்டும் என்பது என் விருப்பம்.

அருஞ்சொற் பொருள்

இறுதி = முடிவு; புதுமை = முன்பு காணாத ஒன்று; அறநிலையம் = அறத்தை வளர்க்கும் இடம்; பந்தயத் திடல் = போட்டி நடக்கும் இடம்.

வினாக்கள்

1. நீ பார்த்த சிறந்த இடங்கள் எவை?

2. குன்னூரின் தனிச் சிறப்பு யாது?

3. உதக மண்டலத்தில் உமக்கு இன்ப மளிப்பன யாவை?

4. உதக மண்டலத்தில் அரசாங்க மாளிகை நிறுவப் பட்டுள்ளதேன்?

5. 'தென்னாட்டின் இயற்கைக் களஞ்சியம்' எது?

இலக்கணம்

பெயர்ச் சொல்லின் அல்லது வினைச் சொல்லின் தன் மையின் மிகுதியைக் காட்டுவது உரிச்சொல்.

'சிறந்த காட்சி' 'பெரு மகிழ்ச்சி.'

# 9. மாதிரிக் கடிதங்கள்

## 1. பள்ளி ஆண்டுவிழா

74, மேலைத் தெரு,
தஞ்சாவூர்,
30-8-'58.

அன்புடைய நண்ப,

வணக்கம். நலம். நலம் அறிய ஆவல். உன் அன்பு நிறைந்த கடிதம் கிடைக்கப் பெற்றேன். மிகவும் மகிழ்ச்சி. நேற்று எங்கள் பள்ளிக்கூடத்தில் ஆண்டு விழாக் கொண்டாடப்பட்டது. தஞ்சாவூர் நகராட்சி மன்றத் தலைவர் தலைமை தாங்கினர்.

பள்ளிக்கூடம் பலநிறக் காகிதங்களால் அழகாகப் புனையப்பட்டிருந்தது. மாணவர் யாவரும் தூய ஆடை அணிந்திருந்தனர். நகரிலுள்ள அறிஞர்கள், பெற்றோர்கள், தாய்மார்கள், குழந்தைகள் யாவரும் கூடினர். மாலை ஐந்து மணிக்குக் கடவுள் வாழ்த்துடன் விழா ஆரம்பமாயிற்று. தலைவரை வரவேற்று எங்கள் பள்ளித் தலைமை ஆசிரியர் கனிவாகப் பேசினர். பள்ளித் தலைவன் தலைவருக்கு மலர்மாலை சூட்டிப் பூச்செண்டும் அளித்தான்.

ஆண்டுவிழாக் கொண்டாட வேண்டுவதன் இன்றியமையாமையைப் பற்றித் தலைவர் ஓர் அரிய சொற்பொழிவு ஆற்றினர். சில மாணவர்கள் உடற் பயிற்சி விளையாட்டுகளைச் செய்து காட்டினர்.

'குமணன்' என்ற நாடகத்தைச் சில மாணவர் நடித்துக் காட்டினர். உதவித் தலைமையாசிரியர்

வந்திருந்த யாவருக்கும் நன்றி கூறினர். நாட்டு வாழ்த்துப் பாட, மாலை ஏழு மணிக்குக் கூட்டம் இனிது முடிந்தது.

உன் பள்ளியில் ஆண்டு விழா நடந்ததா? நடந் திருந்தால் அதன் வரலாற்றை எனக்குத் தெரியப் படுத்து. வணக்கம்.

உன் அன்புடைய நண்பன்,
அரசப்பன்.

முகவரி:—

உயர்திரு கு. கந்தன்,
8\27, கிழைப்பெருந் தெரு,
சென்னை 4.

## 2. விண்ணப்பக் கடிதம்

14, பாவாமடத் தெரு,
தஞ்சாவூர்,
5–12–'58

நகரமன்ற ஆணையாளர் அவர்களுக்கு:

ஐயா,

அண்மையில் பெய்த மழையால் பாவாமடப் பெருந் தெருவில், பல இடங்களில் பள்ளங்கள் உண்டாகித் தண்ணீர் தேங்கி நிற்கிறது. அதனுல் கொசுக்கள் உற்பத்தியாக ஏதுவாகிறது. மக்கள்

நடக்கவும் வண்டிகள் போகவும் துன்பமாக இருக்கிறது. ஆதலால் அவ்விடங்களைப் பழுது பார்க்கத் தக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டு மென்று வணக்கமாக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,
உண்மையுள்ள,
ஞானசேகரன்.

### 3. வாணிபக் கடிதம்

79, சின்ன பீயால் வீதி,
தஞ்சாவூர்,
4–11–'58

கிறிஸ்தவ இலக்கியச் சங்கம்,
சென்னை 3.

ஐயா,

கீழ்க் கண்ட நூல்களை விரைவில் தபால் மூலம் என் விலாசத்திற்கு அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறேன். முன்பணம் ரூபாய் இருபத்தைந்து அனுப்பியுள்ளேன்.

| | | படிகள் |
|---|---|---|
| 1. | அறிஞரும் தொண்டரும் | 6 |
| 2. | பூம்பொழில் வாசகம் முதற் புத்தகம் | 20 |
| 3. | திருக்குறள் | 10 |

இப்படிக்கு,
தங்கள் உண்மையுள்ள,
மா. சுப்பையன்.

## அருஞ்சொற் பொருள்

ஏது = காரணம்; புனையப்பட்டிருந்தது = அலங்கரிக்கப்பட்டிருந்தது; கனிவாக = இனிமையாக; நவின்றார் = சொன்னார்; அண்மை = பக்கத்தில்.

## வினாக்கள்

1. உன் படிப்பைப்பற்றி உன் தந்தைக்கு ஒரு கடிதம் எழுது.
2. உங்கள் பள்ளியில் நடந்த பெற்றோர் நாள் கொண்டாட்டத்தைப்பற்றி உன் நண்பனுக்கு ஒரு கடிதம் எழுது.
3. உன் தலைமை ஆசிரியருக்கு ஒரு விடுமுறை விண்ணப்பக் கடிதம் எழுது.

## இலக்கணம்

'நான் அவ்விடங்களைப் பழுது பார்க்க வேண்டுமென்று வணக்கமாகக் கேட்டுக்கொள்கிறேன்'—இது கருத்து முடியுமாறு அமைந்த வாக்கியம். ஒரு கருத்து முடியும்படி சொற்கள் தொடர்ந்துவரின் அத்தொடர் முற்றுச்சொற்றொடர் அல்லது வாக்கியம் எனப்படும்.

ஒவ்வொரு முற்றுச் சொற்றொடரிலும் எழுவாயும் பயனிலையும் இருக்க வேண்டும். சில முற்றுச் சொற்றொடர்களில் செயப்படு பொருளும் இருக்கும்.

சில மாணவர்கள் உடற் பயிற்சி விளையாட்டுகளைச் செய்து காட்டினர்.

சில மாணவர்கள்—எழுவாய்
செய்து காட்டினர்—பயனிலை
விளையாட்டுகளை—செயப்படுபொருள்

பின்வரும் முற்றுச் சொற்றொடர்களிலுள்ள எழுவாய் பயனிலை செயப்படுபொருள்களைக் கண்டுபிடி:—

1. புலி யானையைக் கொன்றது.
2. கந்தன் முருகனை அழைத்தான்.
3. நான் பொருள்களை வாங்கினேன்.

# 10. ஆறு

1. கல்லும் மலையுங் குதித்து வந்தேன்,—பெரும்
காடும் செடியும் கடந்து வந்தேன்,
எல்லை விரிந்த சமவெளி யெங்கும்—நான்
இறங்கித் தவழ்ந்து தவழ்ந்து வந்தேன்.

2. காயும் நிலத்தழல் ஆற்றிவந்தேன்,—அதில்
கண்குளி ரப்பயிர் கண்டு வந்தேன்,
ஆயும் மலர்ப்பொழில் செய்துவந்தேன்,—
அங்கென்
ஆசை தீரவிளை யாடிவந்தேன்.

3. ஏருத மேடுகள் ஏறிவந்தேன்,—பல
ஏரி குளங்கள் நிரப்பி வந்தேன்,
ஊருத ஊற்றிலும் உட்புகுந்தேன்,—மணல்
ஓடைகள் பொங்கிட ஓடி வந்தேன்.

4. பஞ்சை யரைத்து நூல் நூற்றுவந்தேன்,—சீனி
பாகமாய்ச் செய்து கொடுத்து வந்தேன்,
நெஞ்சம் உலர்ந்த நெடுநகரிற்—குழாய்
நீராக வும்சென்று பாய்ந்து வந்தேன்.

5. அல்லும் பகலும் அலைந்து வந்தேன்,—எங்கள்
ஆழி இறைவனைக் காணவந்தேன்;
நில்லும் எனக்கினி நேரமில்லை—இன்னும்
நீண்ட வழிபோக வேண்டுமம்மா!

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.

அருஞ்சொற் பொருள்

மலர்ப்பொழில் = மலர் நிறைந்த சோலை; உலர்ந்த = காய்ந்த; ஆழி = கடல்; அல்லும் = இரவும்; நெடுநகர் = பெரியநகரம்.

வினாக்கள்

1. ஆறு முதன் முதல் எங்குச் சென்று பாய்கிறது?

2. ஆறு செய்யும் வேலை என்ன?

3. ஆற்றினால் மக்கள் அடையும் நன்மைகள் யாவை?

4. ஆற்று நீரினால் நடைபெறும் தொழில்கள் எவை?

# 11. மாணவர் கல்விச் செலவு

| | | | |
|---|---|---|---|
| சுற்றுலா | பொறுமை | களித்தோம் | குறிப்புச்சுவடி |
| ஆர்வம் | மன அமைதி | கலைத்துறை | எல்லையற்ற |
| வசதி | எண்ணற்ற | தொலைபேசி | கழித்தோம் |
| உவகை | பொழுதுபோக்கு | கிட்டியது | வற்று |

15, மேலை வீதி, தஞ்சை,
2–9–'58.

அன்புடை நண்ப,

நலம். விரும்புவதும் அதுவே. உன்னிடமிருந்து பல நாட்களாகக் கடிதம் இல்லை. நீ பள்ளிப் படிப்பில் ஆழ்ந்துவிட்டதால் கடிதம் எழுத நேரம் அகப்பட வில்லை என்று நினைக்கிறேன். நானும் முடிந்த வரையில் நன்றாகக் கற்று வருகிறேன். சென்ற மாதம் நான் என் பள்ளி மாணவர் பலருடன் பெங்களூருக்குச் சுற்றுலாச் சென்றிருந்தேன். அங்கு நாங்கள் கண்டனவற்றை உனக்குத் தெரிவிக்க வேண்டும் என்றே இதனை எழுதுகிறேன்.

நாங்கள் கடந்த 16 ஆம் நாள் தஞ்சையை விட்டுக் கிளம்பினோம். முப்பத்தொன்பது மாணவர்களும், மூன்று ஆசிரியர்களுமாகச் சென்றோம். தனி மோட்டார் வைத்துக்கொண்டு சென்றதால் வசதிக் குறைவின்றி இன்பமாகச் சென்றுவர முடிந்தது. நாங்கள் காட்சிகளைக் காணச் சென்ற இடங்களில், அங்குள்ள மக்கள் எங்களுக்கு உவகையோடு எல்லாவற்றையும் விளக்கிக் கூறினார்கள்.

பெங்களூரில் நாங்கள் ஐந்து நாட்கள் தங்கியிருந்தோம். 18 ஆம் நாள் காலை 10 மணியளவில் நாங்கள் அவ்வூரை அடைந்தோம். உடனே அன்று மின்சார விளக்குத் தொழிற்சாலை, கண்ணாடித் தொழிற்சாலை, பீங்கான் தொழிற்சாலை ஆகியவற்றைக் கண்டோம். இத்தனைத் தொழிற்சாலைகள் ஒரே ஊரில் இருப்பதைப்பற்றி எங்களுக்குச் சிறிது பொறாமை உண்டாயிற்று. ஆனால் அரசாங்கம் அவ்வாறு செய்யாததற்குக் காரணம் பிறகு தெரிந்தது. இட வசதி, இயற்கை வசதி, மின்சார ஆற்றல் என்பன அங்குப்போல் வேறெங்கும் கிடைப்பதரிது. ஆதலால்தான் அங்கு அத்தனைத் தொழிற் சாலைகள் நிறுவப்பட்டுள்ளன.

நாங்கள் 19 ஆம் நாள் மாலை அந்நகரிலுள்ள இரண்டு பெரிய பூங்காக்களுக்கும் சென்றோம். அவைகளுள் ஒன்று 'லால்பாக்' என்பது. அங்கு பெரிய மரங்கள் கொடிப்பந்தர்கள் பல உள்ளன. புல்லைக் கத்திரித்துப் பலவகை விலங்குகள் போலவும், பறவைகள்போலவும் அழகுற அமைத்துள்ளார்கள். கண்ணாடி அரண்மனை ஒன்று அங்கு அமைக்கப்பட்டுள்ளது. 'கப்பன் பூங்கா' என்னும்

மற்ருெரு பெரிய பூங்காவிலும் மாலைப் பொழுதில் மக்கள் கூட்டம் கூட்டமாக இருந்து பொழுது போக்குவார்கள். அங்கு இரவில் பலநிற ஒளி களுடன் கூடிய நீர் ஊற்றுகள் மிக அழகுடன் காட்சி அளிக்கும்.

நாங்கள் 20 ஆம் நாள் இராமன் ஆராய்ச்சிக் கழகத்திற்குச் சென்ருேம். நோபெல் பரிசு பெற்ற சர். சி. வி. இராமன் எங்களை அன்போடு வர வேற்ருர். அன்று மாலை மூன்று மணிக்கு நாங்கள் டாடா ஆராய்ச்சிக் கழகத்திற்குச் சென்ருேம். இராமன் கழகத்தைவிட அது பெரியதாகவும், பல கலைத்துறைகளையுடையதாகவும் இருக்கிறது.

மீண்டும் 21 ஆம் நாள் நாங்கள் இந்தியத் தொலை பேசித் தொழிற்சாலையைக் கண்டு களித் தோம். 22 ஆம் நாள் இந்துஸ்தான் விமானத் தொழிற்சாலைக்குச் சென்ருேம். அஃது இரண்டா வது பெரும்போர் தொடங்கியபோது நிறுவப் பட்டது. அதுவே இந்தியா முழுவதற்கும் உள்ள ஒரே விமானத் தொழிற்சாலை யாகும். போர் நிகழும்போது பகைவர்மீது குண்டு வீசும் விமானங்களையும், பிரயாணிகளை ஏற்றிச் செல்லும் விமானங்களையும் அங்குக் கண்டோம். ஒரு விமானத்தில் சிறிது நேரம் ஏறிப் பறக்கும் வாய்ப் பும் எங்களுக்குக் கிட்டியது. அதனல் நாங்கள் எல்லையற்ற மகிழ்ச்சி அடைந்தோம்.

இவ்வாறு நாங்கள் ஐந்து நாட்களை இன்பமாக வும் பயன்தரும் முறையிலும் பெங்களூரில் கழித் தோம். நாங்கள் கண்டனவற்றைப் பற்றி நாள் குறிப்புச் சுவடியில் குறித்து வைத்துக் கொண்

டோம். நீயும் இவ்வாறு சுற்றுப் பயணம் சென்றிருந்தால், அதைப் பற்றி விளக்கமாக எழுத வேண்டுமென்று விரும்புகிறேன்.

இங்ஙனம்,
உன் அன்புள்ள நண்பன்,
க. குமரன்.

அருஞ்சொற் பொருள்

சுற்றுலா = கல்விச் செலவு, கற்றற்காகச் செல்லும் பயணம்; உவகை = மகிழ்ச்சி; பூங்கா = பூஞ்சோலை; வாய்ப்பு = சந்தர்ப்பம்; வற்றா = குறையாத.

வினாக்கள்

1. பெங்களூரில் கண்ட இடங்கள் எவை?
2. இந்துஸ்தான் விமானத் தொழிற்சாலையைப்பற்றி எழுதுக.
3. பல தொழிற்சாலைகள் பெங்களூரில் இருப்பதற்குக் காரணம் என்ன?
4. பெங்களூரில் உள்ள இரண்டு பெரிய பூங்காக்கள் எவை? அவற்றின் சிறப்பினை விளக்குக.
5. இன்பச் செலவினால் ஏற்படும் பயன்கள் யாவை?

இலக்கணம்

நாள், மாணவன், ஆசிரியன், காட்சி, பூங்கா:—

இவை ஒவ்வொன்றும் ஒரு பொருளையே குறிக்கின்றன. ஒரு பொருளைக் குறிக்கும் பெயர்ச்சொல் ஒருமை எண் எனப்படும்.

நாட்கள், மாணவர், ஆசிரியர், காட்சிகள், பூங்காக்கள்:—

இவை ஒவ்வொன்றும் பல பொருள்களைக் குறிக்கின்றன. பல பொருள்களைக் குறிக்கும் பெயர்ச்சொல் பன்மை எண் எனப்படும்.

ஒருமை கூறுக:—நாங்கள், பற்கள், தொழிற்சாலைகள், ஆடவர்கள், கழகங்கள்.

பன்மை கூறுக:—ஊர், கல், நான், மாணவன், இடம்.



# 12. சந்திரன்

1. மீனினம் ஓடிப் பரக்குதம்மா,—ஊடே
 வெள்ளி ஓடமொன்று செல்லுதம்மா,
வானும் கடலாக மாறுதம்மா,—இந்த
 மாட்சியில் உள்ள முழுகுதம்மா!

2. முல்லை மலர்ப்பந்தல் இட்டனரோ,—தேவர்
 முத்து விதானம் அமைத்தனரோ,
வெல்லு மதியின் திருமணமோ,—அவன்
 விண்ணில் விழாவரும் வேளையிதோ!

3. அம்புயம் வாடித் தளர்ந்ததம்மா,—அயல்
 ஆம்பலும் கண்டு களிக்குதம்மா,
இம்பர் உலகின் இயல்பிதம்மா,—மதிக்கு
 இன்னுர் இனியாரும் உண்டோ அம்மா!

4. இரவைப் பகலாய் இயற்றுதம்மா,—வெப்பம்
 இல்லாது இளைப்பெலாம் ஓட்டுதம்மா,
அரவம் விழுங்கினும் அஞ்சாதம்மா,—எங்கள்
 ஆண்டவன் சூடும் மணியே யம்மா!

**5**. வளர்ந்து வளர்ந்து பெருகுதம்மா,—உடல்
வட்டந் திருந்தி வருகுதம்மா,
தளர்ந்து தளர்ந்துபின் போகுதம்மா,—கண்ணில்
சற்றும் தெரியாமல் ஆகுதம்மா!

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.

அருஞ்சொற் பொருள்

*மீன் = நட்சத்திரம்; ஆம்பல் = அல்லி; மாட்சி = சிறப்பு; இம்பர் உலகு = இவ்வுலகு; விதானம் = மேற்கட்டி; இன்னார் = பகைவர்; அம்புயம் = தாமரை; இனியார் = நண்பர்; இளைப்பு = சோர்வு; அரவம் = பாம்பு; சற்றும் = சிறிதும்.*

வினாக்கள்

1. *இரவில் ஆகாயத்தின் தோற்றம் சிறப்பிக்கப்பட்டுள்ளது எங்ஙனம்?*

2. *சந்திரன் உதித்ததால் நிகழ்ந்தது என்ன?*

3. *சந்திரன் அடையும் இரு மாறுபாடுகளைக் கூறுக.*

# 13. சயபாலனும் மகிபாலனும்

| | | |
|---|---|---|
| *மாணவன்* | *சுறுசுறுப்பு* | *மேம்பாடு* |
| *உடன்பிறந்தவன்* | *திறம்பட* | *தொழிற்சாலை* |
| *பெற்றோர்* | *நிரப்புமாறு* | *ஆர்வம்* |
| *சான்றோர்* | *எளியவர்களிடம்* | *சந்தை* |
| *துன்புறுகிறோம்* | *அறிவுச்செல்வம்* | |

சயபாலன் என்பவன் கற்றவன்; கற்பதில் ஆசை மிக்கவன். அவனுக்கு உடன்பிறந்தவன் மகிபாலன் என்பவன்; கல்வி அறிவு பெருதவன். இவர்களது பெற்றோர் மிகவும் எளிய நிலையிலிருந்தார்கள்.

சயபாலனும் மகிபாலனும் உழைத்துப் பொருள் தேடலாம் என்று வெளியூர் நோக்கிச் சென்றனர். அங்குச் சற்குணர் என்ற சான்றோர் ஒருவர் இருந்தார். அவர் ஏழை எளியவர்களிடம் இரக்கம் காட்டுவார்; தம்மால் இயன்ற உதவியைச் செய்யத் தயங்கமாட்டார். அவர் சயபாலனையும் மகிபாலனையும் நோக்கி 'நீங்கள் இருவரும் இங்கு வந்தது ஏன்?' என்று கேட்டார். அதற்கு இவர்கள் இருவரும் 'நாங்கள் வறுமையால் மிகவும் துன்புறுகிறோம். ஏதேனும் வேலை தந்து ஆதரிக்க வேண்டும்' என்று கேட்டார்கள்.

அவர்கள் இருவரும் மிகவும் சுறுசுறுப்புள்ளவர்களே. ஆனால் சயபாலன் நல்ல அறிவுள்ளவன். மகிபாலன் எந்த வேலையை ஏவினாலும் திறம்படச் செய்து முடிப்பான். நல்ல உடல் வன்மை படைத்தவன். ஆனால் ஏழ்மை இருவருடைய மன உறுதியோடு உடல் வன்மையையும் குறைத்துவிட்டது.

சற்குணர் அவ்விருவரது ஆற்றலையும் சோதிக்க நினைத்தார். அவ்விருவரையும் அழைத்து ஒவ்வொருவருக்கும் தனித்தனியே ஒரு ரூபாவைக் கொடுத்தார். அவருடைய வீட்டிலுள்ள இரு பெரிய அறைகளை அவர்களிடம் காண்பித்து, அந்த ரூபாவைக் கொண்டுபோய்ச் செலவிட்டு, ஒவ்வொருவரும் ஓர் அறையை நிரப்புமாறு சொன்னார். அவர்கள் இருவரும் ஆர்வமும் உவகையும் மிக்கவராய், தம்தம் அறையின் உள்ளே சென்று நன்கு கவனத்துடன் பார்த்தார்கள்.

சயபாலன் தன் அறையில் இருள் சூழ்ந்திருப்பதை உணர்ந்தான். மகிபாலனோ தனது ஒரு

பெரிய அறை என்பதைமட்டும் உணர்ந்தான். அவர்கள் இருவரும் சந்தைக்குச் சென்றனர். சயபாலன் ஒரு தீப்பெட்டியும் ஒரு மெழுகு வர்த்தியும் இரண்டு அணுக் கொடுத்து வாங்கி வந்தான். மகிபாலன் தன்னிடமுள்ள ஒரு ரூபாவுக்கும் வைக்கோல் வாங்கிக்கொண்டு வந்தான்.

மகிபாலன் தான் வாங்கி வந்த வைக்கோல் கட்டுகளை யெல்லாம் தன் அறைக்குள் கொண்டு போய்ப் போட்டு, அதை நிறைக்க முயன்ருன். ஆனுல் அந்த அறையின் ஒரு பக்கம்கூட நிறைய வில்லை. அவனுல் ஒரு காசுகூட மீதப்படுத்தவும் இயல வில்லை.

சயபாலன் மெழுகு வர்த்தியை ஏற்றி அந்த அறைக்குள் வைத்தான். அவ்வறை முழுவதும் ஒளி நிறைந்து அழகாகக் காட்சி அளித்தது. சற்குணர் வந்து கண்டார். அவனது அறிவுச் சிறப்பைப் புகழ்ந்தார். அவன் தன் அறிவு மேம் பாட்டால் பதினன்கு அணுக்களைத் தன்னிடம் மீதி இருக்கும்படி செய்தான்.

சற்குணர் வந்து மகிபாலனின் அறிவற்ற தன்மையை எண்ணி வருந்தினர். சயபாலனுக்குத் தமது தொழிற்சாலையில் ஓர் உயர்ந்த வேலை கொடுத்து உதவினர். மகிபாலனை வீட்டிற்கு அனுப்பிவிட்டார்.

இக்கதையினுல் நாம் அறிவது என்ன? 'செல்வத்துட் சிறந்தது அறிவுச் செல்வம்' என்று இக் கதை நமக்கு அறிவுறுத்துகின்றது. அவ்வாருனுல் நாம் அறிவு பெற யாது செய்ய வேண்டும்? நாம்

பள்ளிக்கூடத்திற்கு ஒழுங்காகச் சென்று, பணி வாகப் பழகி, ஆர்வமாகக் கல்வி கற்க வேண்டும்.

அருஞ்சொற் பொருள்

இயன்ற = முடிந்த; திறம்பட = சிறப்பாக; ஆர்வம் = முயற்சி.

வினாக்கள்

1. சயபாலனும் மகிபாலனும் யாவர்? அவர்களிடம் பொருந்திய திறமைகள் யாவை?

2. சற்குணர் யார்? வேலை தேடிவந்த இருவரையும் அவர் எவ்வாறு சோதனை செய்தார்?

3. சயபாலன் செயல் அவரை மகிழ்வித்தது ஏன்?

4. இந்தச் சிறு கதை உணர்த்தும் அறிவுரை யாது?

இலக்கணம்

தமிழில் உள்ள எழுத்துகள் நான்கு வகைப்படும். அவை:

| | |
|---|---|
| 1. உயிரெழுத்து 'அ' முதல் 'ஔ' வரை | 12 |
| 2. மெய்யெழுத்து 'க்' முதல் 'ன்' வரை | 18 |
| 3. உயிர்மெய்யெழுத்து பதினெட்டு மெய்யின் மீதும் பன்னிரண்டு உயிரும் தனித்தனியாக ஏறிவரும். | 216 |
| 4. ஆய்த எழுத்து, ஃ | 1 |
| | 247 |

# 14. செய்தித் தாள்

(உரையாடல்)

| | |
|---|---|
| அறிஞர் | தொகுத்து |
| சொற்பொழிவு | அலுவலகங்கள் |
| கடினமாக | விளம்பரங்கள் |
| விபத்து | விலைவாசிகள் |
| ஆண்டுவிழா | தவருமல் |
| நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் | முன்னேறு |

கந்தன்: தம்பி, இன்றைய செய்தித் தாள் இதோ உள்ளது. நீ படித்துப் பார்!

முருகன்: அண்ணா, இது நமக்கு என்ன பயன் தரும்? இதை வயது வந்த பெரியவர் அல்லவா படிக்க வேண்டும்.

கந்தன்: தம்பி, நீ கூறுவது தவறு. இதில் நீ படிக்கத் தக்க செய்திகளும் உள்ளன. விளையாட்டுப் பகுதி, உலகச் செய்திகள், சிறு கதைகள், அறிஞரின் சொற்பொழிவுகள் என்று பல உள்ளன.

முருகன்: இந்தச் செய்தித் தாளைப் பார்த்தால் எங்குத் தொடங்க வேண்டும், எங்கு முடிக்க வேண்டும் என்பதே புலப்படவில்லையே?

கந்தன்: முதலில் செய்தித் தாள் படிப்பது சிறிது கடினமாகத்தான் இருக்கும். ஆனால் வழக்கமாகப் படிப்பது என்று வைத்துக்கொண்டால் மிகவும் எளிதாகிவிடும்.

முருகன்: இங்கே பல பழக்கப்படாத ஊர்களின் பெயர்கள் காணப்படுகின்றனவே!

**கந்தன்:** அவைகள் மேலே நாட்டோர்களின் பெயர்களாகும். அவ்வூர்களிலும் நம் நாட்டோர்களிலும் நிகழ்ந்த முக்கியமான செய்திகளை இத்தாளில் கண்டுகொள்ளலாம். ஒரு புகை வண்டி விபத்து நேர்ந்தது என்ருல், அது செய்தித் தாளில் உடனே வெளிவரும். உன் பள்ளிக் கூட ஆண்டு விழாச் செய்திகளைச் செய்தித் தாளில் படிக்க நீ விரும்புவாயல்லவா? அதுவும் இச்செய்தித் தாளில் வெளியிடப் படுவதுண்டு.

**முருகன்:** இவைகளைச் சென்னையிலுள்ள செய்தித் தாள் நடத்துவோர் எவ்வாறு அறிவர்?

**கந்தன்:** இந்தச் செய்தித்தாள் முழுவதும் ஒருவராலேயே எழுதப்பட்டதன்று. செய்தி அனுப்புவோர் பல இடங்களில் நியமிக்கப் பட்டிருக்கிருர்கள். அவர்கள் அவ்வவ்வூரில் நிகழும் முக்கிய நிகழ்ச்சிகளை உடனுக்குடன் எழுதி அனுப்புவர். மிக அவசரமான செய்திகளைத் தந்தி மூலமாக அனுப்புவர். செய்தித் தாள் ஆசிரியர் அவற்றைத்தொகுத்து வெளியிடுவார். அயல் நாட்டுச் செய்திகளை அனுப்பச் செய்தி அலுவலகங்கள் உள்ளன.

**முருகன்:** இப்பக்கத்தில் வியாபாரத் தொடர்பான விளம்பரங்கள் வந்துள்ளனவே? இவற்ருல் விளையும் பயன் என்ன?

**கந்தன்:** வியாபாரத்தின் முன்னேற்றம் விளம்பரத்தைப் பொறுத்திருக்கிறது. மனத்தையும் கண்ணையும் ஒருங்கே கவரும் விளம்பரங்களினுல்தான் வணிகர்கள் தங்கள் பொருள்

களைப்பற்றிப் பொது மக்களுக்கு அறிவிக்கின்ருர்கள். சென்னை பம்பாய் போன்ற பெரிய நகரங்களில் வழங்கும் விலைவாசிகளை அடிப்படையாகக் கொண்டே நம் நாட்டூர்களில் விலைகள் நிருணயிக்கப்படுகின்றன. கிராமங்களிலும் வேறு ஊர்களிலும் உள்ள வணிகர்கள் செய்தித் தாளின் மூலமாகவே அடிப்படை விலைகளை அறிந்துகொள்ளுவார்கள்.

முருகன்: விளையாட்டுப் போட்டிகளைப்பற்றியும் செய்திகள் காணப்படுகின்றனவே, ஏன்?

கந்தன்: நீ உதைபந்து ஆட்டப் போட்டிகளைப் பார்க்கப் போவதுண்டு அல்லவா? அவைகளைக் காண்பதில் எவ்வளவு மகிழ்ச்சி அடைகிருய்! அதைப்போல உலகின் பலபாகங்களில் ஆற்றல் மிக்க ஆட்டக்காரர்கள் போட்டி விளையாட்டுகள் நடத்தும்பொழுது, பொது மக்கள் அவற்றின் முடிவுகளை ஆர்வத்தோடு எதிர்பார்ப்பர். அவர்களுக்காக அவை வெளியிடப்படுகின்றன.

முருகன்: செய்தித் தாள்கள் எல்லாம் நாள்தோறும் வெளிவருகின்றனவா?

கந்தன்: எல்லாச் செய்தித் தாள்களும் ஒரு நாளில் வெளிவருவன அல்ல. சில நாள்தோறும் வெளிவரும். சில வாரம் ஒருமுறை வெளிவரும். சில பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை வெளிவரும். சில மாதத்திற்கு ஒரு முறை வெளிவரும்.

முருகன்: அண்ணு, அறிவு வளர்ச்சி அடையச் செய்தித்தாள் படித்தல் வேண்டும். இனி

நான் தவருமல் செய்தித் தாள் படிக்கப் போகிறேன். நம் தெருவிலுள்ள படிப்பகத்தில் ஓர் உறுப்பினனுக இன்றே சேர்கிறேன்.

**கந்தன்:** தம்பி, அது நல்லது. அவ்வாறே செய்.

## வினுக்கள்

1. செய்தித் தாள் ஆசிரியருக்குச் செய்திகள் கிடைப்பது எவ்வாறு?
2. நாள்தோறும் வெளிவரும் செய்தித் தாளில் எத்தகைய செய்திகள் காணப்படுகின்றன?
3. செய்தித் தாள் படிப்பதால் ஏற்படும் பயன்கள் யாவை?
4. விலைவாசிகள் செய்தித் தாள்களில் வெளிவருவது ஏன்?
5. விளம்பரங்கள் வெளியிடுவதன் நோக்கம் என்ன?
6. உமக்குத் தெரிந்த செய்தித் தாள்களின் பெயரைக் கூறுக.

## இலக்கணம்

இராமன் வந்தான்; வருகின்ருன்; வருவான்.

இம்மூன்று வினைச் சொற்களும் மூன்று காலங்களைக் காட்டுகின்றன.

வந்தான்: தொழில் நிகழ்ந்து முடிந்ததைக் குறிப்பதால் இறந்த காலம்.

வருகின்ருன்: தொழில் நிகழ்ந்துகொண்டிருப்பதைக் குறிப்பதால் நிகழ்காலம்.

வருவான்: தொழில் இனி நிகழப் போவதைக் குறிப்பதால் எதிர்காலம்.

ஆதலால் காலங்கள் மூன்று வகைப்படும்.

வினைமுற்றுகள் மூன்று காலங்களிலும் வரும்.

கீழ்வரும் வினைமுற்றுகள் எக்காலத்திற்கு உரியன?

1. செய்தித்தாள் நேற்று வந்தது.
2. நான் செய்தித்தாள் படிக்கிறேன்.
3. அவன் செய்தித்தாள் படிப்பான்.
4. நான் இனி ஒழுங்காகச் செய்தித்தாள் வாசிப்பேன்.



# 15. மயில்

அழகிய மயிலே! அழகிய மயிலே!
அஞ்சுகம் கொஞ்ச அமுத கீதம்
கருங்குயில் இருந்து விருந்து செய்யக்
கடிமலர் வண்டுகள் நெடிது பாடத்
தென்றல் உலவச் சிலிர்க்கும் சோலையில்
அடியெடுத்(து) ஊன்றி அங்கம் புளகித்(து)
ஆடு கின்றாய் அழகிய மயிலே!

—பாரதிதாசன்.

அருஞ்சொற் பொருள்

அஞ்சுகம் = கிளி; கடி = மணம்; அமுதகீதம் = அமிர்தம் போன்ற இனிய பாட்டு; புளகித்து = மெய்ம்மயிர் சிலிர்த்து;

கிளிகள் கொஞ்சிப் பேசவும், குயிலும் வண்டும் பாடவும், தென்றல் வீசும் சோலையில் மயில் தனது தோகையை விரித்து ஆடுகிறது.

வினாக்கள்

1. கவிஞர் மயிலை எவ்வாறு அழைக்கிறார்?

2. எந்தச் சூழ்நிலையில் மயில் தோகையை விரித்து ஆடுகிறது?



# 16. கிறிஸ்துபிரான் பெருமங்கலம்

| | | | |
|---|---|---|---|
| பெருமங்கலம் | கொண்டாடு | வழிபடு | திங்கள் |
| மகிழ் | பொதுவாக | ஆடவர் | பெண்டிர் |
| உள்ளார் | இல்லார் | கீதம் | புத்துடை |
| வழிபாடு | திருவயிறு | அன்னை | வான்மீன் |
| சேவை | இறுதி | | |

பெருமங்கலம் என்பது பிறந்த நாள் விழா வாகும். நம் நாட்டில் பல பெருமங்கலப் பண்டிகை கள் கொண்டாடப்படுகின்றன. அவற்றுள் கிறிஸ்து பிரான் பெருமங்கலப் பண்டிகையும் ஒன்று. இப்

பெருமங்கலம் உலகம் எங்கும் கொண்டாடப்படுவ தாகும். ஏனெனில் கிறிஸ்துவைத் தங்கள் தெய்வ மாக ஏற்றுக்கொண்டு வழிபடுகிறவர்கள் உலகம் எங்கும் வாழ்கிறார்கள். கிறிஸ்தவர்கள் டிசம்பர்த் திங்கள் இருபத்தைந்தாம் நாளைக் கிறிஸ்து பிறப் பின் நினைவு நாளாகக் கொண்டு ஆடிப் பாடி மகிழ் வார்கள். பொதுவாக இப்பண்டிகை "கிறிஸ்மஸ்" என்று வழங்கப்படுகிறது. அந்நாளில் ஆடவரும் பெண்டிரும், சிறியவரும் பெரியவரும், உள்ளாரும் இல்லாரும் தங்கள் வீடுகளை அலங்கரித்து, புத் துடை யுடுத்து, புதுக் கீதங்கள் பாடி, ஆலயம் சென்று வழிபாடு நிகழ்த்தி, சிறந்த உணவு உண்டு பெருமகிழ்ச்சியுடன் இருப்பார்கள்.

பலஸ்தீன என்ற நாட்டிலே நாசரேத்து என்னும்ஒரு சிற்றூர் இருந்தது. அவ்வூரில் மரியா என்ற பெயருடைய ஒரு பெண்மணியார் வாழ்ந்து வந்தார். அவருடைய திருவயிற்றில்தான் கிறிஸ்து பிறந்தார். மரியாவும் அவருடைய கணவனும் பேத்தலை என்னும் ஓர் ஊருக்குப் போக வேண்டிய தாயிற்று. அவ்வூரில் அவர்கள் சென்றிருந்தபோது தான் கிறிஸ்து பிறந்தார். அவர் பிறந்தபோது அவரைப் படுக்க வைப்பதற்குக்கூட இடமில்லா திருந்தது. அன்னையார் அவரைத் துணிகளில்சுற்றி ஒரு மாட்டுத் தொழுவத்தின் முன்னணையில் கிடத்தி னார். அவர் பிறந்தபோது வானத்தில் ஒளிமயமான தேவதூதர்கள் தோன்றி இனிமையாகப் பாடினார் கள். ஓர் அற்புதமான வான்மீன் வானில் தோன்றி யது. பெற்றோர்கள் அவருக்கு 'ஏசு' என்று திருப் பெயர் சூட்டினார்கள். அவர் வளர்ந்து பெரியவரான போது நாடெங்கும் சுற்றி நன்மை செய்துவந்தார்.

அவருடைய அன்புச் சேவையால் குருடர்கள் கண் பெற்றார்கள்; ஊமையர்கள் பேசினார்கள்; குஷ்ட நோயர்கள் சுகம் கண்டார்கள்; மரித்தவரும் உயிர் பெற்றெழுந்தார்கள். இறுதியாக அவர் சிலுவை என்ற ஒரு சாவு மரத்தில் சேர்த்து ஆணிகளால் அடிக்கப்பட்டார். அங்கே தம்முடைய உயிரையும் விட்டார். ஆயினும் அவர் உயிர்விட்ட மூன்றும் நாள் மறுபடியும் உயிர்பெற் றெழுந்தார். ஏனெனில் அவர் கடவுள்.

கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டவர்கள்தாம் கிறிஸ்தவர்கள். அவர்கள் கிறிஸ்துவின் பெரு மங்கலத் திருநாளைச் சிறப்பாகக் கொண்டாடி மகிழ் கிறார்கள்.

## அருஞ்சொற் பொருள்

மகிழ்வார்கள் = இன்புறுவார்கள்; உள்ளார் = பொருள் உள்ளவர்கள்; இல்லார் = ஏழைகள்; வழிபடு = கடவுளை வணங்கு; வழிபாடு = கடவுளை வணங்குதல்; ஆடவர் = ஆண்கள்; பெண்டிர் = பெண்கள்; புத்துடை = புது உடை; கீதம் = பாட்டு; வான்மீன் = நட்சத்திரம்.

## வினாக்கள்

1. பெருமங்கலம் என்றால் என்ன?

2. கிறிஸ்தவர்கள் கிறிஸ்து பெருமங்கலத்தை எவ்வாறு கொண்டாடுகிறார்கள்?

3. ஏசுவானவர் எங்குப் பிறந்தார்? அவர் பிறந்த போது நடந்த அற்புதங்கள் என்ன?

4. கிறிஸ்துவானவர் எவ்வித சேவை செய்தார்?

5. கிறிஸ்துவானவர் எவ்வாறு உயிர் விட்டார்? அதன் பின் நடந்த தென்ன?

இலக்கணம்

அரசன், மகன், தந்தை: இவை ஆண்பால் பெயர்கள்.

அரசி, மகள், தாய்: இவை பெண்பால் பெயர்கள்.

இங்கே வரும் சொற்களுள் ஆண்பால் பெண்பால் பெயர்களைத் தனித்தனியே எழுதுக:

ஒருவன், ஒருத்தி, சிறுமி, தங்கை,
செல்வன், தமையன், செல்வி, கள்ளன்.

# 17. குலோத்துங்க சோழனும் கம்பரும்

| | | |
|---|---|---|
| கவிச்சக்கரவர்த்தி | எழில் | எல்லையற்ற |
| காவியம் | கலகல | ஆணை |
| மங்காப் பெருமை | செருக்கு | சுற்றத்தார் |
| நேசித்து | அளவுகடந்தது | வரவேற்று |
| பூங்கா | ஆத்திரம் | அறிவுறுத்தி |
| | பெருந்தன்மை | |

ஏறக்குறைய ஆயிரத்து நூறு ஆண்டுகட்கு முன்னர் கம்பர் என்னும் பெயருடைய அரும் புலவர் வாழ்ந்துவந்தார். இவர் 'கவிச் சக்கரவர்த்தி' என்ற சிறப்புப் பெயரைப் பெற்றுப் புகழுடன் விளங்கியவர். இவர் வடமொழி இராமாயணத்தைத் தமிழில் பெரிய காவியமாக இயற்றி மங்காப் பெருமையும் சிறப்பும் அடைந்தார்.

கம்பர் கல்வியில் மேம்பட்டவர். 'கம்பன் வீட்டுக் கட்டுத் தறியும் கவிபாடும்' என்ற தொடரால் இவர் கவி இயற்றுவதில் தனியான வன்மையுடையவர் என்பது புலப்படும். இவர் குலோத்துங்க சோழனுடைய அவையில் புலவராய் இருந்தார்.

அக்காலத்தில், திருவெண்ணெய் நல்லூர் சடையப்பவள்ளல் என்ற பெருந்தன்மையுடையவர் கம்பரை ஆதரித்தார். சோழ அரசனும் இப் புலவரை மிகவும் நேசித்து மதித்து வந்தான்.

ஒரு நாள் மாலை நேரத்தில் புலவராகிய கம்பரும், ஆளும் ஆற்றல் மிக்க அரசனும் அரண் மனைப் பூங்காவில் உலாவிவந்தனர். இருவரும் இயற்கையின் எழில் மிக்க காட்சியைக் கண்டு மகிழ்ந்து பேசி இன்பமாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்தனர்.



அரசன் திடீரென்று கலகல வென்று நகைத் தான். இதற்குக் காரணம் கம்பருக்குப் புலப்பட வில்லை. அரசனைப் பார்த்தார். அப்பார்வை 'ஏன் சிரித்தீர்?' என்று கேட்பதுபோல் இருந்தது. உடனே, 'புலவரே! இந்தச் சிறந்த அழகு மிக்க நாடும், இதில் வாழ்கின்ற மக்களும் எனக்கு அடிமை

அல்லவா? அதை நினைத்தேன். சிரிப்பை அடக்க முடிய வில்லை. சிரித்தேன்' என்றான் அரசன்.

அரசனின் செருக்கை அடக்க நினைத்த கம்பர், 'உண்மையே. இந்த நாடும், மக்களும், பொருள் களும் யாவும் உமக்கு அடக்கம். நீரோ எமக்கு அடக்கம்' என்றார்.

இதைக் கேட்டவுடன் அரசனின் சினம் அளவு கடந்தது. 'இவ்வெளிய புலவனுக்கு நான் அடக்கமா? நன்று' என்று ஆத்திரம் அடைந்தான். கம்பரை அடுத்த நாள் அரசவையில் அவமானப் படுத்த வேண்டும் என்று தீர்மானித்தான். ஆனால் அடுத்த நாள் கம்பர் தம் அறிவுச் சிறப்பால் அரச னைப் பணிய வைத்தார். ஆதலால் அரசன், புலவரை நோக்கி, 'கம்பரே! நீர் பெருமிதம் கொண்டுள்ளீர்; என் ஆதரவால்தான் சிறப்பு அடைந்துள்ளீர்; அதைச் சிறிதும் நீர் உணர வில்லை; செருக்குற்றுப் பேசுகிறீர். ஆதலால் என் நாட்டை விட்டு உடனே வெளியேறும்,' என்று சினந்து கூறினான்.

அரசனின் சினம் ஆணை இவற்றிற்குக் கம்பர் அஞ்சவும் இல்லை; கவலை கொள்ளவும் இல்லை. அவர் சோழனைப் பார்த்து 'அரசே! இவ்வுலகம் மிகப் பெரிது. உலகம் முழுவதும் உனக்கு உரிமை யானது அன்று. சோழ நாடான சிறு பகுதியையே நீ ஆளுகின்றாய். நானோ புலவன். நான் செல்லும் ஊர் எல்லாம் எனக்குச் சொந்த ஊரே. யாவரும் என் சுற்றத்தாரே. அரசனாகிய உனக்கோ உனது நாட்டில் மட்டுமே பெருமை உண்டு. அறிவுடைய எனக்கோ எங்குச் சென்றாலும் சிறப்பு உண்டு. கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு

என்பதை உணர்க' என்று அறிவுறுத்தி அந்நாட்டை விட்டுக் கிளம்பிச் சேர நாடு அடைந்தார். அங்குச் சேர அரசன் அவரை அன்புடன் வரவேற்று ஆதரித்தான்.

ஆதலால் மாணவர்களே! அக்காலப் புலவர்கள் மதிப்புக் குறையாமல் வாழ்ந்தார்கள் என்பதை உணர்ந்து அறிவுடையோராய் வாழ்வீராக.

### அருஞ்சொற் பொருள்

மங்கா = குறையாத; நேசித்து = விரும்பி; எழில் = அழகு; அளவு = எல்லே; ஆணை = கட்டளை; சுற்றத்தார் = உறவினர்.

### வினக்கள்

1. கம்பரின் சிறப்பினைக் கூறுக.

2. கம்பரைப் போற்றியோர் எவர் எவர்?

3. ஒரு நாள் மாலை பூங்காவில் அரசனுக்கும் புலவருக்கும் இடையே நிகழ்ந்த உரையாடல் என்ன?

4. அடுத்த நாள் அரசவையில் நிகழ்ந்தது என்ன? அதன் முடிவு யாதாயிற்று?

### இலக்கணம்

நான், நாம், நாங்கள்—இச்சொற்கள் பேசுவோனையும் அவனைச் சார்ந்து உள்ளவர்களையும் குறிப்பதால் தன்மை இடம்.

நீ, நீர், நீங்கள்—இவை பேசுவோனின் முன்பு நிற்பவர்களைக் குறிப்பதால் முன்னிலை இடம்.

அவன், அவள், அவர்கள், அது, அவை—இவை தன்னையும், முன் நிற்பவரையும் குறிக்காமல் பிறரிடம் படர்ந்து செல்வதால் படர்க்கை இடம்.

# 18. அறிவுடைய அப்பாஜி

| | | |
|---|---|---|
| நுண்ணறிவு | சிலைகள் | புன்முறுவல் |
| மதியூகம் | வேறுபாடு | அறிவுரை |
| நடுத்தரம் | தென்பட்டது | விடாப்பிடி |
| வடிவு | ஊகித்தார் | பாராட்டினர் |

விஜய நகரத்தைப் பல அரசர்கள் ஆண்டனர். அவர்களுள் முதன்மையாக விளங்கியவர் கிருஷ்ண தேவராயர். அவரது ஆற்றலும் நுண்ணறிவும் மிக்க மந்திரியின் பெயர் அப்பாஜி. அப்பாஜி நுண்ணறிவினால் பரவிய புகழை அறியாதார் இலர்.

அக்காலத்தில் டில்லியை பாதுஷா ஆண்டு வந்தான். அப்பாஜியின் மதியூகத்தைக் கேட்டான். அதன் உண்மையை அறிய நினைத்தான். விஜயநகர வேந்தருக்கு மூன்று சிலைகளை அனுப்பி ஒரு கடிதமும் விடுத்தான். அக்கடிதத்தில் 'அம் மூன்று சிலைகளுள் உயர்ந்தது எது? தாழ்ந்தது எது? நடுத்தரம் எது?' என்று கண்டு எழுதியனுப்பும்படி குறித்திருந்தான்.

வடிவிலும் அமைப்பிலும் அம்மூன்று சிலைகளும் ஒரே மாதிரியாக இருந்தன. கிருஷ்ண தேவராயர் சிலைகளின் உயர்வு தாழ்வுகளை விளக்குமாறு சபையிலுள்ளோரைக் கேட்டார். எல்லாரும் ஒவ்வொரு சிலையையும் தனித்தனியே எடுத்துப் பார்த்தனர். வேறுபாடு ஒன்றும் நன்கு உற்று நோக்கியும் புலப்பட வில்லை. அனைவரும் 'அவை மூன்றும் ஒரே தன்மையன. ஒன்றற்கொன்று வேறுபாடு அற்றது' என்று கூறினர்.

சிலைகளை மதி மிக்க அப்பாஜியிடம் காட்டிக் கேட்டார். அவைகளை அப்பாஜி கூர்ந்து கவனித்தார். ஒவ்வொன்றன் காதிலும் சிறிய துவாரம் ஒன்று தென்பட்டது. இந்தத் துவாரத்தின் மூலமாகத்தான் இச்சிலைகளின் உயர்வு தாழ்வைக் கண்டு பிடிக்க வேண்டும் என்று அப்பாஜி ஊகித்தார். மெல்லிய கம்பி ஒன்றை எடுத்து, ஒவ்வொன்றன் காதிலும் செலுத்திப் பார்த்தார்.

அக்கம்பி, ஒரு சிலையின் வாய்வழியாக வெளி வந்தது. இன்னொரு சிலையின் காதின் மூலம்வெளிப் பட்டது. மூன்ருவதிலோ வெளியே வாராமல் உள்ளேயே தங்கிவிட்டது. அது கண்ட அப்பாஜி தலையை ஆட்டினூர். புன்முறுவல் செய்தார். பின்பு அரசரைப் பார்த்துக் கீழ் வருமாறு சொன்னூர்:

'மன்னரே, செவி வழியே வாங்கிய கம்பியை இச்சிலை வெளியில் சிறிதும் காட்ட வில்லை. பிறர் கூறிய அறிவுரையை விடாப்பிடியாகக் கைப்பிடிக் கும் தன்மை இதனூல் விளங்கும். ஆதலால், இதுவே உத்தமம். மற்ருென்று, ஒரு காது வழியே வாங்கி மற்ருெரு காதின் வழியே வெளியிடும். இச்சிலை மத்திமம். மூன்ருவது சிலை, காதினூல் வாங்கி வாயினூல் கொட்டும். இஃது அதமம்.'

அரசனும், அங்குக் கூடியிருந்த சபையோரும், அதுகேட்டு அப்பாஜியின் அறிவுத் திறத்தை வியந்து பாராட்டினர்.

பாதுஷாவும், அப்பாஜியின் விடையைக் கேள்வியுற்று, வியந்தான். மதியூகி மந்திரியைப் புகழ்ந்தான். பரிசுகளும் அனுப்பி மகிழ்ந்தான்.

ஆதலால் மாணவர்களே! நுட்ப அறிவே மேன்மையடைய வழி. அதனை அடையப் பெரியோர் சொற்கேட்டு, சான்றோர் இயற்றிய நூல்களைக் கற்று மேன்மையுற வேண்டும். அவ்வாறு முன்னேறியதால் அல்லவா அப்பாஜி அறிவுடைய அமைச்சர் ஆனார்.

அருஞ்சொற் பொருள்

பரவிய = யாவரும் அறிந்த; மதியூகம் = நுட்பமான ஊக்கம்; உற்று = கவனித்து; புன்முறுவல் = அடக்கமான சிரிப்பு; விடாப்பிடி = உறுதி.

வினாக்கள்

1. கிருஷ்ணதேவராயர் அவையில் உள்ளோரை நோக்கிக் கேட்டது என்ன?

2. அப்பாஜி எதில் மர்மம் இருக்க வேண்டும் என்று ஊகித்தார்?

3. அந்தப் பொம்மைகளின் வேறுபாட்டை அப்பாஜி எவ்வாறு அறிந்தார்?

4. அறிந்த அப்பாஜி கூறியது என்ன?

இலக்கணம்

பொன், இராமன், கந்தன், இரும்பு—இப்பெயர்கள் முதல் வேற்றுமை.

யாதொரு மாறுபாடும் இல்லாத பெயர்ச்சொல்லே முதல் வேற்றுமை.

பின்வரும் வாக்கியங்க்ளில் உள்ள முதல் வேற்றுமைச் சொற்களை எடுத்து எழுதுக:—

1. நம் முன்னோர் நற்குணமுடையவர்.
2. புலவர் கவிகளைப் பாடுவர்.
3. நைட்டிங்கேல் உலகத்திற்கு உதவியவர்.
4. விஜயநகரத்தைப் பல அரசர் ஆண்டனர்.

# 19. நல்லொழுக்கம்

1. அன்பை வளர்க்க வேண்டும்,—கிளியே!
அறிவைப் பெருக்க வேண்டும்;
உன்போல் பிறரை யெண்ணி—நல்ல
உதவி புரிய வேண்டும்.

2. தெய்வ நினைப்பு வேண்டும்,—கிளியே!
தேச நினைப்பு வேண்டும்;
மெய்ம்மையொழுக்கம் வேண்டும்,—நெஞ்சில்
வீர உறுதி வேண்டும்.

3. அன்னைசொல் கேட்க வேண்டும்,—தந்தை
ஆணைக் கிணங்க வேண்டும்;
தன்னை வணக்க வேண்டும்,—பிறர்
தம்மை மதிக்க வேண்டும்.

4. ஆசிரி யர்க்கடங்கிக்—கிளியே!
அறிவை வளர்க்க வேண்டும;
தேசம் வாழுந் தொழிலில்—மிக்க
திறமை ஓங்க வேண்டும்.

—கவியோகி சுத்தானந்த பாரதியார்.

அருஞ்சொற் பொருள்

கிளியே = கிளிபோன்ற குழந்தையே; மெய்ம்மை = உண்மை; ஆணை = கட்டளை; இணங்க வேண்டும் = கீழ்ப் படிய வேண்டும்; வணக்க = பிறரிடம் பணிவுடையவனாக இருக்க; ஓங்க = உயர.

வினாக்கள்

1. நாம் பிறர்க்குச் செய்ய வேண்டுவது என்ன?
2. நாம் இடைவிடாது நினைக்க வேண்டுவன எவை?
3. எவ்வெவர் சொற்களைத் தட்டாது கேட்க வேண்டும்?
4. எத்துறையில் திறமை உயர வேண்டும் என்கிறார் பாரதியார்?

# 20. கிளியின் நன்றி மறவாப் பண்பு

| | | |
|---|---|---|
| செந்தமிழ் | தீராத | ஊன்றி |
| கனி | ஆற்றல் | இரை |
| வரம் | சித்தர் | வெம்மை |

முன்னொரு காலத்தில் நமது செந்தமிழ் நாட்டில் சித்தர் பலர் வாழ்ந்தனர். எடுத்துக்காட்டாகப் பாம்பாட்டிச் சித்தர் குதம்பைச் சித்தர் என்பவர் களைக் கூறலாம். சித்தர் துறவறத்தை மேற்கொண்டு தவ வலிமையால் பல சித்திகள் பெற்றவர் ஆவர். அவர்கள், செய்ய முடியாத செயல்களை நிகழ்த்தும் ஆற்றல் உடையவர்கள். அவர்கள் சிறந்த பச்சிலை கள் மருந்துகள் முதலியவைகளைச் சேர்த்துத் தீராத நோய்களையும் தீர்த்துவிடும் திறமை யுடையவர்கள்.

திருமாலிருஞ்சோலை என்று வழங்கப்படும் அழகர் மலைக்குப் பக்கத்தில் ஒரு பெரிய காடு இருந்தது. ஒரு நாள் சித்தர் ஒருவர் அக்காட்டின் வழியாகப் போய்க்கொண்டிருந்தார். அவ்வமயம் ஒரு சிறு ஆற்றங்கரையைக் கண்டார். அதில் நீராடி வழிபாடுகளை முடித்துக்கொண்டு கிளம்பினார். கிளம்பியபோது, அவர் கண் முன்பு ஒரு பெரிய பட்டுப்போன மரம் தென்பட்டது. அதை ஊன்றிக் கவனித்தார். அதில் ஒரு பொந்து இருந்தது. அதன் வாயில் ஒரு கிளி இருப்பதைப் பார்த்தார். அக்கிளி மிகவும் இளைத்து வாட்டமுற்றுக் காணப்பட்டது.

சித்தர் அக்கிளியை நோக்கி, "அறிவற்ற கிளியே! இலை, தழை, காய், கனி முதலியன நிறைந்த பசுமை யான மரங்கள் பல உள்ளன. அவைகளை எல்லாம்

சிறிதும் எண்ணுது இப்பட்ட மரத்தின்மேல் ஏன் வாடி வலிமை யற்றுத் தங்கி யுள்ளாய்?" என்ருர்.

அதைக் கேட்ட கிளி சித்தரைப் பார்த்து, "ஆற்றல் உடைய முனிவரே! முன்பு இம் மரம் அழகாகவும் பசுமையாகவும் பல இனிய காய் கனிகளோடும் விளங்கியது. அப்போது நானும், பல பறவைகளும் இதில் தங்கியிருந்தோம். ஒரு நாள் ஆடுகளுக்கு உணவாக எல்லாத் தழைகளையும் மக்கள் பறித்தனர். சில கிளைகளையும் வெட்டித் தள்ளினர். அவ்வமயம் கோடையின் வெம்மை வருத்தியது. மழையும் பெய்யவே இல்லை. ஆதலால் இம்மரம் பட்டுப்போயிற்று. மரம் பட்டுப்போகவே, இங்கு வாழ்ந்த பறவைகள் எல்லாம் வேறு மரங்களை விரும்பிச் சென்றன. ஆனல், நான்மட்டும் இதை விட்டு வேறிடம் செல்ல நினைக்கவும் இல்லை; விரும்பவும் இல்லை," என்றது.

அதற்குச் சித்தர் "உனக்கு ஏன் விருப்ப மில்லை? இங்கு இருந்தால் தகுந்த இரை இல்லாமல் இறந்து விடுவாயே!" என்ருர்.

அதற்குக் கிளி, "முனிவருள் சிறந்தவரே! நான் இம் மரக் கிளையில் உள்ள கூட்டில் பிறந்து வளர்ந்தேன். இதன் கனிகளை உண்டு மகிழ்ந்தேன். இதன் கிளைகளில் உட்கார்ந்து அவற்றின் உதவியால் பறக்கவும் அறிந்தேன். நான் உலகில் தோன்றியது முதல் இதுவரை வாழ்ந்த இம்மரம் பட்டுப்போனலும், இதை விட்டுச் செல்ல என் மனம் எண்ணவில்லை," என்று வருத்தத்துடன் சொல்லியது.

அஃறிணைப் பொருளான கிளியின் நன்றியறிதல் பண்பைக் கண்டு சித்தர் மகிழ்ச்சி அடைந்தார்.

பிறகு அவர் அதை நோக்கி, "அரும் பண்பு நிறைந்த கிளியே! இவ்வுலகில் வாழும் யாவரும் உன்னைப்போலவே பிறர் துன்பம் காணின் இரக்கங் கொள்ளுதலும் செய்ந்நன்றி யறிதலும் உடையவர் களாய் வாழ்க்கை நடத்த வேண்டும். உனக்கு என்ன வரம் வேண்டுமோ, கேள்! தருகிறேன்," என்றார்.

அச்சொற்களைக் கேட்ட கிளி மிகவும் மகிழ்ச்சி யடைந்து, "சான்றோரே! இம்மரம் முன்போல இலை, பூ, காய், கனி பெற்றுச் செழிக்குமாறு செய்ய வேண்டும். உங்களை நான் என்றும் மறக்கமாட்டேன்; எக்காலத்தும் துதிப்பேன்," என்று உறுதியுடன் கூறிற்று. அப்படியே சித்தர் அதனை முன்போலச் செழித்து ஓங்குமாறு செய்து தம் வழி நோக்கி நடந்தார். கிளியும் தன் வாழ் நாளின் இறுதிவரை அதிலேயே வாழ்ந்தது.

மாணவர்களே! பிறர் செய்த உதவியை மறவாத பண்புடையவர்களாய் வாழ்வீர்களாக.

'நன்றி மறவேல்'

அருஞ்சொற் பொருள்

செந்தமிழ் = தூய தமிழ்; தீராத = நீங்காத; நன்றி = நன்றாக; கனி = பழம்; ஆற்றல் = வலிமை; இரை = உணவு.

வினாக்கள்

1. சித்தர் என்பார் யார்?

2. மரத்தின் கிளைகள் பட்டுப்போனதற்குக் காரணம் என்ன?

3. கிளி அங்கேயே வசித்ததற்குக் காரணம் என்ன?

4. கிளி சித்தரிடம் கேட்ட வரம் யாது? அதிலிருந்து நீவிர் அறியும் நீதி யாது?

இலக்கணம்

முருகனை அடித்தான்.
பொன்னைத் தேடினோம்.
வீட்டைக் கட்டினர்.

இப்பெயர்ச் சொற்களைச் சார்ந்துள்ள 'ஐ' இரண்டாம் வேற்றுமை.

பின்வரும் வாக்கியங்களில் உள்ள முதல் வேற்றுமைச் சொற்களையும், இரண்டாம் வேற்றுமைச் சொற்களையும் எடுத்து எழுதுக:—

1. உனக்கு என்ன வரம் வேண்டும்?
2. சித்தர்கள் துறவறத்தை மேற்கொண்டு தவவலிமையால் பல சித்திகள் பெற்றவர்கள்.
3. நன்றியை மறவேல்.
4. பிறர் செய்த உதவியை மறவாத பண்புடையவர்களாய் வாழ்வீர்களாக.

# 21. ஆபத்தில் உதவுதல்

உரையாடல்

| | | |
|---|---|---|
| காலம் தவறாது | வழுக்கி | சேய்மை |
| இருகரையும் | கேலி செய்தனர் | நீராடியவுடன் |
| குறித்த நேரம் | ஈரம் | பண்பாடு |
| முதியவர் | மெதுவாக | இரங்குக |

[சத்திய சீலன் நற்குணமுள்ள மாணவன். அவன் எட்டாம் வகுப்பில் படித்து வருகிறான். பிறர்க்கு உதவியைத் தவறாது செய்வான். அவன் ஒருநாள் வகுப்பிற்குக் காலம் தாழ்த்து வந்தான். அவனுக்கும் ஆசிரியருக்கும் பின்வருமாறு உரையாடல் நடந்தது.]

சத்தியசீலன்: ஐயா! வணக்கம். நான் காலம் தாழ்த்து வந்துள்ளேன். அன்போடு என்னை மன்னிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ஆசிரியர்: சத்தியசீல! நீ காலம் தவருது வருபவன் ஆயிற்றே. இன்று இவ்வாறு வந்ததற்குத் தக்க காரணம் என்ன?

சத்தி: ஐயா! நான் எப்பொழுதும்போல குறித்த நேரத்திலேயே வீட்டை விட்டுக் கிளம்பினேன். இன்று காலை முதல் மழை நன்கு பெய்ததால் எங்குப் பார்த்தாலும் சேருய்க் கிடக்கிறது. பக்கத்து வாய்க்காலில் நீர் இரு கரையும் ஒன்ருகத் தோற்றமளிக்கிறது. அங்கே ஒரு முதியவர் தண்ணீரில் விழுந்து கிடந்தார். அவர் முதுமையால் அங்கிருந்து மீள முடிய வில்லை. அவருக்கு உதவி செய்தேன். ஆதலால் காலம் தாழ்த்து வந்தேன். மன்னிக்க வேண்டும்.

ஆசிரியர்: ஆ! கிழவரா? அவர் எப்படி விழுந்தார்?

சத்தி: ஐயா! வாய்க்காலில் ஆழம் மிகுதியாக இல்லை. கரையோரத்தில் அவர் வழுக்கி விழுந்தார். ஆனுல் கால்கள் சேற்றில் சிக்கிக் கொண்டன. விழுந்தபோது இடுப்பிலும் அடி பட்டது. ஆதலால் அவரால் எழ முடிய வில்லை.

ஆசிரியர்: அவர் வழுக்கி விழுந்த நேரத்தில் மக்கள் ஒருவரும் பக்கத்தில் இல்லையா?

சத்தி: பலர் இருந்தனர். அவர்கள் கிழவர் விழுந்ததைக் கண்டு இகழ்ந்து கேலி செய்தனர். உதவி செய்ய எவரும் வரவில்லை. நான் அவர்களை அணுகி உதவி செய்ய என்னுடன் வருமாறு கெஞ்சிக் கேட்டேன். அவர்கள்,

கிழவரை மெதுவாக எழுமாறு செய்து
கரையில் கொண்டுவந்து விட்டேன்.

ஆசிரியர்: அதன் பிறகு?

சத்தி: நான் அவரை என் வீட்டிற்கு அழைத்து செல்ல விரும்பி, சிறிது சேய்மையிலிருந் வண்டிக்காரனை அழைத்து அதில் பெரி வரைச்சோர்வு நீங்கும்படி படுக்க வைத்தேன் என் வீட்டிற்கு அழைத்துச் சென்றேன் என் தாயார் அவருக்கு வெந்நீர் வைத்து கொடுத்தார். நீராடியவுடன் கொஞ்ச உணவு கொடுத்தார். கட்டிக்கொள்ளத் துண ஒன்றும் தந்தார். பிறகு நான் பள்ளிை நோக்கிக் கிளம்பினேன்.

ஆசிரியர்: தம்பி, நீ ஆற்றிய தொண்டினைக்கேட்க கேட்க என் மனம் அளவற்ற மகிழ்ச்சி அடை கின்றது. உன் தாயார் நற்குணம் நிறைந்தவ பண்பாடு உடையவர்; பிறர்க்கு உதவுதலே சிறப்புத் தரும் என்ற மனப்பான்மை கொண் வர். நீ அவர் மகன் அல்லவா? ஆதலா தான் நீயும் உதவினாய். உனக்கு இறைவ அருள் புரிவானாக! வாழ்க உன் பண்பாடு.

மாணவர்களே! சத்திய சீலனைப்போ நீங்களும் உலகில் பழக வேண்டும். உங்க பெற்றோர்களும் பெருமை பெறுவர். தன்ன

துன்புற்றவர்களுக்கு இரங்குங்கள்; எளிய வரை ஆதரியுங்கள். அதுவே உங்கள் வாழ்க்கையின் குறிக்கோளாக இருக்கட்டும்.

### அருஞ்சொற் பொருள்

சிக்கி = அகப்பட்டு; கேலி = இகழ்ச்சி; அணுகி = நெருங்கி; ஈரம் = அன்பு; நீராடியவுடன் = குளித்தவுடன்; அளவற்ற = எல்லையற்ற; பெருமை = சிறப்பு; குறிக்கோள் = கொள்கை.

### வினாக்கள்

1. சத்திய சீலன் பள்ளிக்குக் காலம் தாழ்த்து வந்தது ஏன்?

2. சத்திய சீலன் பள்ளிக்கு வரும் வழியில் நடந்தது என்ன?

3. அதைக் கண்ட சத்திய சீலன் எவ்வாறு உதவினான்?

4. இதில் நீவிர் அறியும் நீதி யாது?

### இலக்கணம்

'ஆல் ஆன்' என்னும் உருபுகள் மூன்றும் வேற்றுமையைக் காட்டும்.

'ஓடு, ஒடு' என்னும் உருபுகளும் மூன்றும் வேற்றுமைக்கு உரியன.

கம்பர் ஒட்டக்கூத்தரால் புகழப்பட்டார்.

கம்பரோடு குலோத்துங்க சோழன் அளவளாவினான்.

'கு' என்ற உருபு நான்காம் வேற்றுமையைக் குறிக்கும்.

என் வீட்டிற்கு அழைத்து வந்தேன்.

அவருக்கு உதவி செய்தேன்.

பிறர்க்கு உதவுதலே சிறப்புத் தரும்.

# 22. முறை தவருத மன்னன்

| | | |
|---|---|---|
| முறை | எல்லையற்ற | இன்னல் |
| திறம்பாதவன் | வெருண்டு | ஏவலாட்கள் |
| எளியவர்கள் | உருளையில் | கவலையின்றியும் |
| இறை | கதறியது | மன்ருடி |
| அஃறிணை | காவலன் | தீர்ப்பு |
| படைக்கலம் | வாயில்லாப் பிராணி | வியப்பு |
| | செங்கோல் | |

திருவாரூரில் ஒரு மன்னன் ஆண்டுவந்தான். அவன் முறை திறம்பாதவன்; மன்னுயிரைத் தன்னுயிர்போல் எண்ணுபவன். இறையன்பு உடையவன். எளியவர்களைக் காணின் இரங்கும் பண்புடையவன். அஃறிணைப் பொருள்களிடத்தும் அன்பு காட்டுவான். அவனுக்கு ஒரே மகன் இருந்தான். அவன் எல்லா நூல்களையும் இளமையிலேயே கற்று அறிஞனய்த் திகழ்ந்தான். அரசர்க்கு வேண்டிய படைக்கலப் பயிற்சிகளில் தேர்ந்தான். பதினறு ஆண்டு நிரம்பப் பெற்ற அவன் இளவரசனுக்கு வேண்டிய எல்லாக் குணங் களும் பொருந்தியவனய் இருந்தான்.

தேர் ஓட்டிச் செல்வதில் இளவரசனுக்கு எல்லை யற்ற விருப்பம் இருந்தது. அவன் நாள்தோறும் காலையும் மாலையும் தேரில் ஏறி அவ்வூரைச் சுற்றி வருவது வழக்கம்.

ஒரு நாள் காலையில் ஓர் அழகிய தேரில் ஏறித் திருவாரூர் வீதிகளின் வழியே சென்ருன். தேர் மிக விரைவாகச் சென்றுகொண்டிருந்தது. பசுவின் கன்று ஒன்று வெருண்டு துள்ளிக் குதித்துத் தேரின்

முன் பாய்ந்தது. தேரை உடனே நிறுத்த முடிய வில்லை. ஆகவே தேர் அக்கன்றின்மேல் ஏறியது. கன்று தேர் உருளையில் சிக்கி இறந்தது.

தாய்ப் பசு தன் கன்று இரத்த வெள்ளத்தில் கிடக்கும் காட்சியைக் கண்டு கதறியது. பசுவின் துன்பத்தைக் கண்டு இளவரசனும் வருந்தினான். துன்பம் மிக்க அப்பசு அரசனது கோயிலை அடைந்தது. அவ்வரசன் மக்கள் துன்பத்தை அடையின் அதைத் தெரிவிக்க அரண்மனையின் வாயிலில் ஒரு மணி கட்டியிருந்தான். அதை அடித்தால் அரசன் நேரே வந்து கேட்டு ஆவன செய்வான்.

அந்த அறிவுள்ள பசுவும் அம்மணியைத் தன் கொம்புகளால் அசைத்து ஒலியை எழுப்பியது. அரசன் அவ்வொலி கேட்டு அங்கு வந்தான். பசுவோ, கண்ணீர் வழியக் காவலனைக் கண்டது. வாயில்லாப் பிராணியான பசுவோ நீதியை வேண்டுகிறது! அரசன் பசுவின் இன்னலைப் போக்க விரும்பினான். ஏவலாட்களை அனுப்பி நடந்ததை உணர்ந்தான்.

சிறிது நேரத்தில் அமைச்சர்களும் சான்றோர் களும் அரசவையில் கூடினர். மகனைக் குற்றம் செய்தவர் நிற்க வேண்டிய இடத்தில் நிறுத்தி விசாரித்தான். மன்னன், தனது மைந்தன் பலர் நடமாடும் வீதியில் விரைவாகவும் கவலையின்றியும் தேரோட்டியதால் வந்த விளைவு இது. ஆதலால் அதே தேரால் இவன் உயிரைப் போக்குதலே முறை என்று முடிவு செய்தான். அவையோர் அரசன் முடிவைக் கேட்டுத் திடுக்கிட்டனர்.

அமைச்சர்களும் சான்ரேர்களும் 'இளவரசனேக் கொல்வது சரியன்று' என்று மன்ருடிக் கேட்டனர். அரசனே அதற்குச் செவி சாய்க்காது முதல் மந்திரியை அழைத்துத் தீர்ப்பை நிறைவேற்றும் படி ஆணேயிட்டான்.

முதல் மந்திரிக்கு இளவரசனேக் கொல்ல மனம் வரவில்லே. மன்னன் கட்டளேயை மீறவும் வழி யில்லே. ஆதலால், அவன் தற்கொலே செய்து கொண்டான். அச்செய்தி கேட்ட அரசன் சிறிதும் மனம் கலங்காது தானே தீர்ப்பை நிறைவேற்றினுன். இளவரசனும் பசுவின் கன்றைப்போல் இரத்தப் பெருக்கில் கிடந்தான்.

இறைவனுர் அரசனது நீதியைக் கண்டு வியப் பொடு மகிழ்ச்சியும் கொண்டார். யாவரையும் உயிர் பெற்றெழுமாறு அருளினுர்.

"மன்னர்க்கழகு செங்கோல் முறைமை."

அருஞ்சொற் பொருள்

*முறை = நீதி; படைக்கலம் = வில், வேல், வாள் முதலிய கருவிகள்; வெருண்டு = அச்சம் அடைந்து; இன்னல் = துன்பம்; மன்ருடி = கெஞ்சி; தீர்ப்பு = முடிவு.*

வினுக்கள்

1. *திருவாரூரை ஆண்டுவந்தவன் யாவன்? அவன் அரசாண்ட தன்மை யாது?*

2. *சோழன் மகன் தேரில் செல்லும்போது நிகழ்ந் தது என்ன?*

3. *பசு தன் துன்பத்தை உணர்த்தியது எங்ஙனம்?*

4. *பசுவின் துன்பம் அறிந்த அரசன் அரசவை யைக் கூட்டிச் செய்தது என்ன?*

5. *தீர்ப்பை நிறைவேற்றியவர் யார்? ஏன்?*

### இலக்கணம்

'இன், இல்' என்னும் உருபுகள் ஐந்தாம் வேற்றுமையைக் காட்டும்.

தஞ்சையின் வடக்கு கரந்தை.
கல்வியிற் பெரியவர் கம்பர்.

கீழ்வரும் வாக்கியங்களில் மறைந்துள்ள வேற்றுமை உருபைக் கண்டுபிடி:

1. ஔவை நல்வழி பாடினார்.
2. இன்று நான் படக்காட்சி சென்றேன்.
3. குழந்தை விரல் சுவைக்கும்.
4. மாணவர்கள் விளையாடும் இடம் செல்லுகிறார்கள்.
5. எஸ். ஆர். பாண்டியன் அமெரிக்கா சென்றார்.

# 23. உடலையும் உயிரையும் வளர்ப்பன

செந்நெல் மாற்றிய சோறும்—பசுநெய்
தேக்கிய கறியின் வகையும்
தன்னிகர் தானியம் முதிரை—கட்டித்
தயிரொடு மிளகின் சாறும்
நன்மது நஞ்செய் கிழங்கு—காணில்
நாவில் இனித்திடும் அப்பம்
உன்னை வளர்ப்பன, தமிழா,—உயிரை
உணர்வை வளர்ப்பது தமிழே.

—பாரதிதாசன்.

### அருஞ்சொற் பொருள்

தேக்கிய = தங்கிய; நிகர் = ஒப்பான; முதிரை = துவரம் பருப்பு; மதுரம் = இனிமை; உணர்வு = அறிவு.

### வினாக்கள்

1. உடலை வளர்ப்பன எவை?
2. தமிழ் எவ்வெவைகளை வளர்க்கும்?

# 24. தற்காலக் கவிஞர்கள்

| | | |
|---|---|---|
| புத்துணர்ச்சி | பூதவுடல் | தியாகம் |
| ஊட்டுவனவாய் | புகழுடல் | மாவட்டம் |
| தொண்டு | பன்மொழிப் புலமை | தீட்டுவதிலும் |
| அண்மை | அளவளாவினர் | ஊக்கம் |
| | படிறு | |

செந்தமிழ் நாட்டில் தற்காலத்தில் கவிஞர் பலர் தோன்றி எளிமையும் இனிமையும் நிறைந்த பாடல்கள் பல இயற்றியுள்ளனர். அப்பாடல்கள் தமிழர் மனத்தில் புத்துணர்ச்சியை ஊட்டுவனவாய் உள்ளன. இத்தகைய சுவை மிக்க பாடல்களைத் தமிழ் உலகிற்குத் தந்தோர்களுள் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, யோகி சுத்தானந்த பாரதியார், அரசவைக் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை என்ற கவிஞர்களைப் பற்றிச் சிறிது காண்போம்.

## கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.

இவர் திருவாங்கூரைச் சேர்ந்த சுசீந்திரத்தை அடுத்துள்ள தேரூர் என்னும் கிராமத்தில் 1876-ஆம் ஆண்டில் வேளாளர் மரபில் தோன்றினார். இவரது தந்தையார் சிவதாணுப் பிள்ளை என்பவர். அன்னையார் ஆதிலட்சுமியம்மையார் ஆவர். பிள்ளையவர்கள் இளமையிலேயே தமிழ், ஆங்கிலம், மலையாளம் என்ற மூன்று மொழிகளையும் கற்றுத் தேர்ச்சி அடைந்தார். பின்பு திருவனந்த புரத்திலுள்ள ஆசிரியர் பயிற்சிப் பள்ளியில் சேர்ந்து கற்றுத் தேர்ந்தார்.

கவிமணியவர்கள் 1901-ஆம் ஆண்டு முதல் ஆசிரியராகப் பணியாற்றினர்; அப்பொழுதே எளிய, இனிய பாடல்களைப் பாடிப் பொழுது போக்குவார். திருவனந்தபுரம் பெண்கள் கல்லூரியில் தமிழாசிரியராகப் பணியாற்றி 1931-ஆம் ஆண்டு ஓய்வு பெற்ருர். அதிலிருந்து கவிகள் இயற்றித் தமிழ்த் தொண்டு புரிந்துவந்தார்.

குழந்தை உள்ளம் படைத்த இவர் அருள் மிக்கவர்; படிறு இல்லாதவர். இவர் நாகர்கோயில் என்ற ஊரின் அண்மையிலுள்ள புத்தேரி என்ற ஊரில் பல ஆண்டு வாழ்ந்தார். 1954-ஆம் ஆண்டு பூதவுடலை நீத்துப் புகழுடல் எய்தினர்.

## யோகி சுத்தானந்த பாரதியார்

இவர் பாண்டி நாட்டில் உள்ள சிவகங்கை என்னும் ஊரில் 1897-ஆம் ஆண்டு அந்தணர் மரபில் தோன்றினர். இவரது பெற்ருர் ஜடாதரர் காமாட்சியம்மையார் என்பவராவர். இவர் இளமையிலேயே கவி பாடும் ஆற்றல் உடையவராய்த் திகழ்ந்தார். இவர் தமிழ் ஆங்கிலம் என்ற இரு மொழிகளிலும் தேர்ச்சி அடைந்தார்; மேலும் பல மொழிகளைக் கற்றுப் பன்மொழிப் புலமை எய்தினர்.

சுத்தானந்தர் பசுமலையில் ஆசிரியப் பயிற்சி பெற்றுக் காட்டுப்புத்தூரில் ஆசிரியராகத் தொண்டாற்றினர். 1921-ஆம் ஆண்டில் காந்தியாரைத் திருச்சியில் கண்டு அளவளாவினர். உடனே தம் வேலையைத் தியாகம் செய்து நாட்டுத் தொண்டராயினர்.

சில ஆண்டுகள் செல்லத் தவமே மேல் என எண்ணித் திருவண்ணுமலையிலும் புதுச்சேரியிலும் தங்கி மௌன நிலையை மேற்கொண்டு யோகம் பயின்ருர். இவர் பல நூல்கள் எழுதியுள்ளார். இவரது நூல்கள் தமிழ் வளமும் மேலான கொள்கைகளும் நிறைந்தன. யோக சித்தி பெற்று விளங்குவதால் 'யோகி' என்று பாராட்டப்படுகிருர்.

## அரசவைக் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை

இவர் சேலம் மாவட்டத்திலுள்ள மோகனூரில் **1888**-ஆம் ஆண்டில் பிறந்தவர். இவரது தந்தையின் பெயர் வேங்கடராம பிள்ளை என்பது. இளமையிலேயே கவிகள் பாடுவதிலும் சித்திரம் தீட்டுவதிலும் ஊக்கம் காட்டிவந்தார். உயர்நிலைப் பள்ளிப் படிப்பு முடிந்தவுடன் திருச்சிராப்பள்ளியிலுள்ள கல்லூரி ஒன்றில் சேர்ந்து இரண்டு ஆண்டுகள் கல்வி பயின்ருர்.

காந்தியின் கொள்கைகளைத் தம் வாழ்க்கையில் பின்பற்றலானுர். பின்னர் காங்கிரஸ் கட்சியில் சேர்ந்து நாட்டுத் தொண்டு செய்தார். நாட்டுப் பற்று, தொண்டு மனப்பான்மை, ஏழைகளிடம் இரக்கம் முதலியன கொண்டு ஆர்வம் உடையவராய் விளங்குகிருர். இவருடைய பாடல்கள் நாட்டுப் பற்று மிக்கனவாய் விளங்கும்.

இவர் நாமக்கல் என்ற ஊரில் பல ஆண்டுகளாக இருந்து வருவதால் 'நாமக்கல் கவிஞர்' என்று வழங்கப்படுகிருர். சென்னை அரசியலார், இவரது ஆற்றலைக் கண்டு இவரை அரசவைக் கவிஞராக நியமித்திருக்கின்றனர்.

### அருஞ்சொற் பொருள்

அளவளாவினார் = மனம்கலந்து பேசினார்; அண்மை = பக்கத்தில்; தீட்டுவதிலும் = எழுதுவதிலும்; ஊக்கம் = மனக் கிளர்ச்சி; தியாகம் = பற்றைத் துறத்தல்; படிறு = வஞ்சகம்.

### வினாக்கள்

1. கவிமணி, யோகி, அரசவைக் கவிஞர். இந்த அடைமொழிகள் முறையே எவ்வெவர்க்கு வழங்கப்படுவன?

2. நாமக்கல் கவிஞரிடம் அமைந்த நற்பண்புகள் யாவை?

3. சுத்தானந்த பாரதியாரை 'யோகி' என்று அழைப்பதற்குக் காரணம் என்ன?

### இலக்கணம்

1. கவிஞரது ஊர் சுசீந்திரம்.

2. அரசவைக் கவிஞரிடம் பல நற்குணங்கள் அமைந்திருந்தன.

3. கவிஞரே! வணக்கம்.

'அது' என்னும் உருபு ஆறும் வேற்றுமையைக் காட்டும். 'இடம்' என்பது ஏழாம் வேற்றுமை உருபாகும். படர்க்கைப் பெயரை முன்னிலைப்படுத்தி அழைத்தலே எட்டாம் வேற்றுமையாகும்.

கீழ் வரும் வாக்கியங்களில் அமைந்த வேற்றுமை யுருபை எடுத்துக் காட்டுக:—

1. இது எனது புத்தகம்.

2. மாடுகள் எனது வயலில் மேய்கின்றன.

3. கண்ணனிடம் புத்தகம் இருந்தது.

4. மாணவர்களே! ஒழுங்காக நடத்தலே மேன்மை தரும்.

# 25. அக்பரும் விகடகவி வீரபாலரும்

| | | |
|---|---|---|
| வெறுப்பு | தயக்கமின்றி | நறுக்கிய |
| விகடகவி | அருமை | இனிய சொற்கள் |
| நகைச்சுவை | எளிமை | தருவித்தேன் |
| தவருது | ஆறுதல் | கடினம் |
| அஞ்சாது | சந்தர்ப்பம் | |

ஏறக்குறைய முந்நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் அக்பர் என்னும் மொகலாய அரசர் இந்தியாவை ஆட்சி புரிந்தார். அவர் நற்குண நற்செயல்கள் நிரம்பப் பெற்றவர். அவர் பிற வகுப்பாரிடம் வெறுப்பு இல்லாதவர். இந்துக்களையும் இராச புத்திரர்களையும் பெரிதும் ஆதரித்தார். அவர் அவையில் வீரபாலர் என்ற விகடகவி ஒருவர் இருந்தார். வீரபாலர் அக்பர் கேட்கும் எந்த வினவிற்கும் உடனே விடை கூறுவார். ஒவ்வொரு விடையும் அழகும் பொருத்தமும் அமைந்து இருப்பதோடு நகைச் சுவை மிக்கும் காணப்படும். இதனல், அக்பருக்கு வீரபாலரிடம் தனி மதிப்பும் அன்பும் உண்டாயிற்று.

அக்பர் ஒருநாள் அரசவையைக் கூட்டியிருந்தார். அங்கு அமைச்சர் சேனைத் தலைவர் யாவரும் குறித்த நேரத்தில் தவருது வந்துவிட்டனர். ஆனல் வீரபாலரைக் காணும். ஆதலால் அவர் வரும் வரை கூட்டம் தொடங்க வில்லை. பணியாளனை அனுப்பி வீரபாலரை அழைத்து வருமாறு செய்தார்.

வீரபாலர் அவையை அடைந்ததும், "குறித்த நேரம் கடந்ததற்குக் காரணம் என்ன?" என்று கோபத்துடன் அக்பர் கேட்டார்.

வீரபாலர் அஞ்சாது தயக்கமின்றிப் பணிவுடன், "அரசே! என்மேல் குற்ற மில்லை. என் குழந்தை அழுகையைச் சமாதானப்படுத்திவர நேரமாயிற்று. மன்னிக்க வேண்டும்," என்றார்.

அக்பர்: சிறு குழந்தையின் அழுகையை நிறுத்து வது கடினமா?

வீரபாலர்: ஆம். மிகமிகக் கடினம்.

அக்பர்: குழந்தைக்குத் தின்பண்டங்களைத் தரின் அழுகையை நிறுத்திவிடுகிறது. இது வா அருமை.

வீரபாலர்: இதுவரை தங்களுக்கு அத்தகைய சந் தர்ப்பம் நேராமையால் நீங்கள் இவ்வாறு எளிமை என எண்ணுகிறீர்கள். உண்மையில் செய்ய இயலாத செயல் குழந்தையின் அழுகையை அடக்குவதேயாம். விரும்பினல் நான் குழந்தையைப்போல் அழுகிறேன். நீங்கள் தந்தையைப்போல் ஆறுதல் கூறி அழுகையை நிறுத்த முயற்சி செய்யுங்கள் பார்ப்போம்!

அக்பர் இசைய, வீரபாலர் குழந்தை அழுவது போல் அழத் தொடங்கினர். அக்பர் தந்தைபோல நடிக்கத் தொடங்கினர். 'கண்ணே! முத்தே! அழாதே. உனக்கு என்ன வேண்டும் சொல்' என்று சொன்னர். விளையாட்டுப் பொருள்களைக் கொண்டு வந்து கொடுத்தார். குழந்தையின் அழுகை நிற்க வில்லை.

குழந்தையைத் தட்டிக் கொடுத்து நல்ல இனிய சொற்களைப் பேசினார். 'ஏதாவது தின்பண்டம் வேண்டுமா' என்று கேட்டார். குழந்தை 'கரும்பு வேண்டும்' என்றது. உடனே கரும்பு வந்து சேர்ந்தது. மேலும் குழந்தை அழுதுகொண்டே 'நறுக்கிக் கொடு' என்றது. உடனே அதுவும் நிறைவேற்றப் பட்டது. ஆனால் குழந்தை உரத்த குரலில் அழத் தொடங்கியது.

அக்பர் 'என் அழுகிறாய்?' என்றார். குழந்தை 'நறுக்கிய கரும்புகளை முழுக் கரும்பாக்கித் தா' என்று வீறிட்டுக் கதறியது.

அவையில் இருந்த யாவரும் நகைத்தனர். அக்பர் குழந்தையின் அழுகையை நிறுத்துவது கடினம் என உணர்ந்தார்.

பிறகு வீரபாலர் "அரசே! என் குழந்தை யானையும் பானையும் கேட்டது. உடனே இரண்டையும் தருவித்தேன். 'யானையை இந்தப் பானைக்குள் அடை' என்று அழுதது. இச்செயலை யாரால் செய்ய முடியும்?" என்றார். இச்செய்தி கேட்ட யாவரும் வீரபாலர் கூறியதை ஒப்புக்கொண்டனர்.

அருஞ்சொற் பொருள்

மொகலாய = முகம்மதிய; சேனைத்தலைவன் = படைத் தலைவன்; சமாதானம் = அமைதி; சந்தர்ப்பம் = வாய்ப்பு.

வினாக்கள்

1. அக்பர் என்பார் யார்?

2. வீரபாலர் அரசவைக்கு நேரம் கடந்து வந்ததற்குக் கூறிய காரணம் என்ன?

3. 'குழந்தையின் அழுகையை நிறுத்துவது கடினம்' என்பதை அக்பர் எவ்வாறு அறிந்தார்?

4. வீரபாலரின் குழந்தையை ஏன் அடக்க முடியவில்லை?

இலக்கணம்

நான் இன்று கடைக்குச் சென்றேன். கடைக்குச் சென்றவர் யார்?

முற்றுப்புள்ளி வரும் வாக்கியம் வேறு. வினாக் குறி வரும் வாக்கியம் வேறு.

கீழே உள்ள வாக்கியங்களைப் படி, ஏற்ற இடங்களில் வினாக்குறியும் முற்றுப்புள்ளியும் இடு:

என்மேல் குற்றமில்லை சிறு குழந்தையின் அழுகையை நிறுத்துவது கடினமா குழந்தைக்குத் தின்பண்டம் தரின் அது அழுகையை நிறுத்திவிடுகிறது

திருவாரூரில் வள்ளல் ஒருவன் இருந்தான் அவன் பெயர் ஆரூரான் அவனுக்கு ஒரே மகன் அம் மைந்தன் பெயர் தங்கப்பன் அவனுக்குப் படிக்க வாராதது ஏன் தெரியுமா

# 26. புலவர் போப்பையர்

| | | |
|---|---|---|
| பாதிரிமார் | போதகர் | வரலாற்று நூல் |
| கடவுட்பற்று | இடைவிடா உழைப்பு | தொகை நூல் |
| சமயத்தொண்டு | பல்கலைக் கழகம் | கல்லறை |
| திருமறை | பணி | தாழ்மையுள்ள |

ஐரோப்பிய நாடுகளிலிருந்து செந்தமிழ் நாட்டிற்கு வந்து, கிறிஸ்தவ மதத்தைப் பரப்ப வந்த பாதிரிமார் பலருள், தமிழ்ப் புலமை யுடையவராய்த் தமிழ் நாட்டு மக்களுக்குத் தொண்டு செய்த அறிஞர் சிலராவர். அவருள் ஜி. யு. போப்பையரும் ஒருவர். இவர் ஆங்கிலேயர். 1820-ஆம்

ஆண்டில் பிறந்து இளமை முதற்கொண்டே கடவுட் பற்றுடையவராய் விளங்கினர். சமயத் தொண்டே செய்ய வேண்டும் என்று விரும்பிய இவர் கிறிஸ்தவத் திருமறையை நன்கு கற்ருர். தாம் செய்ய விரும்பிய தொண்டு தமிழகத்தில் செய்யப் பட இருந்ததால் தமிழையும் வடமொழியையும் கற்ருர். 1839-ஆம் ஆண்டில் சென்னையை அடைந்தார். சமயகுருவின் ஆணைப்படி சாயர்புரம் என்ற சிற்றூருக்கு அனுப்பப்பட்டார்.

சாயர்புரம் என்னும் சிற்றூர் திருநெல்வேலி மாவட்டத்தில் தூத்துக்குடிக்குத் தென்மேற்கே பத்து மைல் தொலைவில் உள்ளது. போப்பையர் சென்ற காலத்தில் அங்குச் சில வீடுகளே இருந்தன. ஒரு சிறிய கோவிலும் இருந்தது. போப்பையர் அவ்வூரில் ஒரு பள்ளியைத் தொடங்கினர். அப் பள்ளி சமயத் தொண்டு செய்வாருக்குப் பயிற்சி தரும் பள்ளியாகும். ஐயர் அங்கு ஆசிரியர் வாழ வீடுகளைக் கட்டினர்; மாணவர் தங்கிக் கல்வி கற்க விடுதிகளை ஏற்படுத்தினர்; உணவுச் சாலை அமைத் தார்; வகுப்பறைகளைக் கட்டினர். அப்பள்ளியில் பல ஊர் மாணவர்கள் கல்வி பயின்று சமய போதகராயினர்.

போப்பையர் அவ்வூரைச் சுற்றியிருந்த ஊர் களில் உள்ள பலர் கிறிஸ்து நெறியைப் பின்பற்று மாறு செய்தார். இடைவிடா உழைப்பும் ஊக்க மும் கொண்டு செயல் ஆற்றியதால் பல ஊர்களில் கிறிஸ்தவத் திருச்சபைகள் ஏற்பட்டன.

இவர் 1849-ஆம் ஆண்டில் இங்கிலாந்து சென்று திருமணம் செய்துகொண்டு தமிழ் நாட்டை

மீண்டும் வந்தடைந்தார். தஞ்சையில் ஏறக்குறைய எட்டு ஆண்டுகள் தங்கினார். சிறந்த தமிழறிஞர் களிடம் தமிழ் இலக்கிய இலக்கணங்களை முறை யாகக் கற்றார். பிறகு உதகமண்டலத்திலும் பெங்களூரிலும் வாழ்ந்தார். பெங்களூரில் பிஷப் காட்டன் பாடசாலையில் தலைவராகப் பணியாற்றினார். அப்பள்ளி முன்னேறிப் புகழ் பெற்றது. ஆதலால் பொதுமக்கள் தங்கள் பிள்ளைகளை அப்பள்ளியில் சேர்த்தனர்; அவருடைய தமிழ்ச் சொற்பொழிவு களையும் சமயச் சொற்பொழிவுகளையும் மக்கள் விரும்பிக் கேட்டு இன்புற்றனர்.

தம் தாய் நாடு மீண்ட போப்பையர் ஆக்ஸ் போர்டு பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரிய ராகப் பணியாற்றினார். அக்காலத்தில்தான் திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகிய தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் பெயர்த்தார். அந்நூல் களைப் படித்த மேல் நாட்டு அறிஞர் தமிழ் மொழி யின் பழமை, இனிமை, சிறப்பு என்பவைகளை நன்றாக அறிந்தனர். தமிழ்ப் புலவரான போப்பை யருக்குப் பரிசுகள் வழங்கினர்.

போப்பையர் தஞ்சையில் இருந்து சமயப் பணி ஆற்றிய பொழுதே மாணவர் தமிழ் கற்பதற்கு ஏற்ற இலக்கண நூல்களை இயற்றினார்; வரலாற்று நூல் ஒன்றையும் தொகுத்து வெளியிட்டார்; தொகை நூல் ஒன்று எழுதினார். எல்லாவற்றையும் விட இங்கிலாந்திலிருந்து வெளியிட்ட திருக்குறள், நாலடியார், திருவாசகம் என்றவற்றின் மொழி பெயர்ப்பு நூல்களே அவரது பெரும் புலமைக்குச் சான்றாக விளங்குகின்றன. தாம் இறந்த பிறகு

தமது கல்லறையில் 'தாழ்மையுள்ள தமிழ் மாணவன்' என்று பொறிக்குமாறு சொல்லியிருந் தார் என்ருல், அவரது தமிழ்ப் பற்றுத்தான் என்னே! அச்சான்ருேருக்கு நம் வணக்கம் என்றும் உரியதாகுக.

அருஞ்சோற் பொருள்

பாதிரிமார் = கிறிஸ்தவ மதத் தொண்டர்; பணி = சேவை, வேலை; பல்கலைக்கழகம் = பல கலை யறிவினையும் தரும் அறிஞர் சங்கம்; கல்லறை = இறந்தாரை அடக்கம் செய்யும் இடம்; தாழ்மை = பணிவு.

வினுக்கள்

1. போப்பையர் என்பவர் யார்?

2. போப்பையர் முதன் முதல் எவ்விடத்தில் வந்து தங்கினுர்?

3. சாயர்புரத்தில் போப்பையர் செய்த முன்னேற்றங் கள் யாவை?

4. தாய்நாடு மீண்ட போப்பையர் தமிழ் மொழிக்குச் செய்த தொண்டுகள் எவை?

5. போப்பையர் சிறந்த தமிழ்ப் பற்று உடையவர் என்பது ஏன்?

இலக்கணம்

நாலடியார், திருக்குறள், திருவாசகம் என்ற மொழி பெயர்ப்பு நூல்களே அவரது பெரும் புலமைக்குச் சான் ருக விளங்குகின்றன.

மேலேயுள்ள வாக்கியத்தில் உள்ள குறிகளைக் கால் புள்ளிகள் என்பர். இவற்றைப் பொருள் தெளிவாக விளங்குவதற்கு நிறுத்தி வாசிக்க வேண்டிய இடங்களில் அமைக்க வேண்டும். இங்குப் பெயர்களை வெவ்வேருகப் பிரிப்பதற்கு இக்குறி (,) அமைந்திருக்கிறது.

கீழ்வரும் வாக்கியங்களில் காற்புள்ளிகளை அமைக்க:—

1. கொல்லர் தச்சர் கன்னார் முதலிய தொழிலாளர் களும் சில மாதங்களே வேலை செய்கிறார்கள்.

2. கந்தன் கடைக்குச் சென்று மூன்றணா கொடுத்து ஒரு சமூக நூல் வாங்கினான்.

3. போப்பையர் வீரமாமுனிவர் கால்டுவெல் என்பவர்கள் வெளிநாடுகளிலிருந்து வந்து தமிழில் தேர்ச்சியடைந்தார்கள்.

## 27. சுவடிச் சாலை

1. தமிழர்க்குத் தமிழ்மொழியில் சுவடிச்சாலை
சர்வகலா சாலையைப்போல் எங்கும்வேண்டும்;
தமிழில்இலாப் பிறமொழிநூல் அனைத்தும்நல்ல
தமிழாக்கி வாசிக்கத் தருதல்வேண்டும்,
அமுதம்போல் செந்தமிழில் கவிதைநூல்கள்
அழகியவாம் உரைநடையில் அமைந்த [நூல்கள்
சுமைசுமையாய்ச் சேகரித்துப் பல்கலைசேர்
துறைதுறையாய்ப் பிரித்தடுக்கி வைத்தல் [வேண்டும்.

2. நாலைந்து தெருக்களுக்கு ஒன்றுவீதம்
நல்லதுநல் வசதியதாய் இல்லம்வேண்டும்;
நூல்எல்லாம் முறையாக ஆங்கமைந்து
நொடிக்குநொடி ஆசிரியர் உதவுகின்ற
கோலமுறும் செய்தித்தாள் அனைத்தும் ஆங்கே
குவித்திருக்க வகைசெய்து தருதல்வேண்டும்.
மூலையில்ஓர் சிறுநூலும் புதுநூல்ஆயின்
முடிதனிலே சுமந்துவந்து தருதல்வேண்டும்.

—பாரதிதாசன்.

அருஞ்சொற் பொருள்

சுமை சுமையாய் = மிகுதியாக; கோலம் = அழகு; முடிதனிலே = தலையிலே.

விஞக்கள்

1. சுவடிச் சாலை என்ருல் என்ன?

2. தமிழ் மொழியிலுள்ள சுவடிச் சாலையை எவ்வாறு முன்னேற்றுதல் வேண்டும்?

3. சுவடிச் சாலையில் இடம் பெற வேண்டுவன யாவை?

# 28. வானெலியும் அதன் பயன்களும்

பொதுவிடம்
வியப்பு
இசைவிழா
வானநிலை அறிக்கை
நீர்மட்ட நிலைகள்
ஒலிப்பரப்பு
பொழுதுபோக்கு
மின்சாரக் கருவி
மின் ஆற்றல்
அமரகவி
ஒலியேற்கும் கருவி

மாணவர்களே! 'ரேடியோ' என்று வழங்கப் படும் வானெலிப் பெட்டியை நீங்கள் கண்டிருக் கிறீர்கள் அல்லவா! உங்கள் வீட்டில் வானெலிப் பெட்டி இருக்கிறதா? அஃது எவ்வாறு இயங்கு கிறது?

இக்காலத்தில் வானெலி பெரிய கிராமங்களி லும், பொதுவிடங்களிலும் இருப்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். அதனுல் உலகில் பல இடங் களிலுமிருந்து பாட்டுகள், செய்திகள், சொற்

பொழிவுகள் ஆகியவற்றை நம் ஊரிலேயே அல்லது வீட்டிலேயே வானொலி வாயிலாகக் கேட்டுக் கொள்ளுகிறோம். என்ன வியப்பு!

வானொலிக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டுச் சில ஆண்டுகளே ஆயினும் மிக விரைவில் யாவராலும் பயன்படுத்தப்படும் நிலைக்கு வந்து விட்டன. உலகச் செய்திகள், இசை விழாக்கள், அன்றாடக விலை நிலவரங்கள், வானிலை அறிக்கை, நீர்மட்ட நிலைகள், சிறுவர்க்கான நாடகங்கள், கதைகள் என்று பலவகைப்பட்ட நிகழ்ச்சிகள்



வானொலி வாயிலாக ஒலி பரப்பப்படுகின்றன. மேலும், கல்வித் தொடர்பான பாடங்களும் வானொலி மூலம் 'கல்வி ஒலிப்பரப்பு' என்று தனி நிகழ்ச்சியாக, நேரம் ஒதுக்கப்பட்டு கற்பிக்கப்படு கின்றன. ஆகவே, மாணவர்களின் அறிவு

வளர்ச்சிக்கும், மக்களின் பொழுது போக்குக்கும், மனமகிழ்ச்சிக்கும் வானொலி மிகவும் பயன்படுகிறது.

வானொலிப் பெட்டியிலிருந்து நாம் கேட்கும் ஒலிகள் எவ்வாறு வருகின்றன? அவை அப் பெட்டியை எவ்வாறு அடைந்தன?

வானொலி வாயிலாக ஒரு பாடலைக் கேட்கிறோம் என்று வைத்துக்கொள்ளுவோம். வானொலி நிலையத்திலிருந்து ஒரு பாடகர் அந்தப் பாடலைப் பாடுகிறார். அந்தப் பாடலின் ஒலி, அலையலையாக எழும்பும் அல்லவா? அந்த ஒலி அலைகள் 'ஒலி வாங்கி' என்னும் ஒரு மின்சாரக் கருவியைத் தாக்குகின்றன. உடனே அந்த 'ஒலிவாங்கி' அந்த ஒலியலைகளை மின்சார அலைகளாக மாற்றிவிடுகிறது. அந்த அலைகள் உலக மெங்கும் பரவுகின்றன. அப்படிப் பரவுகின்ற மின் அலைகளை நம் ஊரிலும் வீடுகளிலும் உள்ள வானொலிப் பெட்டி பிடித்துக் கொள்ளுகிறது. உடனே அந்த மின் அலைகள் மறுபடியும் ஒலி அலைகளாக மாறி நம் காதுகளில் விழுகின்றன. நாம் அந்தப் பாடகர் பாடின அதே பாடலைக் கேட்கிறோம்! தமிழ் நாட்டில் சென்னையிலும் திருச்சிராப்பள்ளியிலும் வானொலி நிலையங்கள் இருக்கின்றன. நமது பரத கண்டத்தின் தலை நகராகிய தில்லியிலும் மற்றும் சில சிறந்த நகரங்களிலும் அந்நிலையங்கள் இருக்கின்றன.

"காசி நகர்ப்புலவர் பேசும் உரைதான்
காஞ்சியில் கேட்பதற்கு ஓர் கருவி செய்வோம்"

என்று பாரதியார் பாடினார். அவர் பாடிய அப் பாட்டு இக்காலத்தில் உண்மையே ஆயிற்று.

### அருஞ்சொற் பொருள்

வியப்பு = ஆச்சரியம்; வான நிலை = மழையின் நிலை; அமரகவி = அழியாப் புகழுடல் பெற்ற கவி.

### வினாக்கள்

1. 'ரேடியோ ஓர் விந்தை'—ஏன்?
2. 'வானொலிப் பெட்டி அறிவு வளர்ச்சிக்குப் பயன் படும்'—எவ்வாறு?
3. வானொலிக்குத் தேவையாகும் இரு வகைக் கருவிகள் யாவை?
4. தமிழ் நாட்டில் 'வானொலி நிலையம்' எங்கெங்கு உள்ளன?
5. பாரதியின் பாட்டு உண்மையாதல் எங்ஙனம்?

### இலக்கணம்

போப்பையர் அவ்வூரில் ஒரு சமயப் பள்ளியைத் தொடங்கினார்; ஆசிரியர் வாழ வீடுகளைக் கட்டினார்; மாணவர் தங்கிக் கல்வி கற்க விடுதிகளை ஏற்படுத்தினார்; உணவுச் சாலையை அமைத்தார்; வகுப்பறைகளைக் கட்டினார். அப்பள்ளியில் பல ஊர் மாணவர்கள் பயின்று சமய போதகராயினர்.

இவ்வாக்கியத்தில் அரைப் புள்ளிகள் ( ; ) பல வருகின்றன. ஒரே எழுவாய்க்கு வினைமுற்றுகள் (பயனிலைகள்) பல வருமாயின் அவ்வினை முற்றுகளை யடுத்து அரைப் புள்ளிகள் இட வேண்டும்.

## 29. கைத்தொழில்

1. கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள்;
கவலை உனக்கில்லை ஒத்துக்கொள்;
எத்தொழில் எதுவும் தெரியாமல்
இருப்பது உனக்கே சரியாமோ?

2. உழவும் தொழிலும் இல்லாமல்
உலகில் ஒன்றும் செல்லாது.
விழவும் கலையும் விருந்துகளும்
வேறுள இன்பமும் இருந்திடுமோ?

3. நெசவுக் காரர்கள் நெய்யாமல்
நிலத்தவர் உடைக்கென் செய்வார்கள்?
குசவன் செய்திடும் பாண்டமன்றோ
குடித்தனம் நடத்திட வேண்டுமென்றும்?

4. வேந்தர்கள் வரிப்பணம் வாங்குவதும்
வீரர்கள் வெற்றிகள் தாங்குவதும்
மாந்தர்கள் செய்யும் எத்தொழிலும்
மண்ணிற் சிறப்பது கைத்தொழிலால்!

—நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை.

அருஞ்சொற் பொருள்

விழவு = திருவிழாக்கள்; நிலத்தவர் = உலகில் வாழ்பவர்; மாந்தர் = மக்கள்; மண் = இவ்வுலகம்.

வினாக்கள்

1. ஒரு மனிதனுக்கு எப்பொழுது கவலை யில்லை?
2. எவ்விரு தொழில்கள் மிகவும் இன்றியமையாதன?
3. மண்ணில் கைத்தொழிலால் சிறப்பன எவை?

# 30. நட்பின் மேன்மை

| | | |
|---|---|---|
| கொடுங்கோலன் | புரவலன் | கொலையாளி |
| தண்டிப்பான் | அளிப்பேன் | நாற்புறமும் |
| மன்னிப்பான் | உற்றநண்பன் | மனோவேகம் |
| தூக்கில் | ஆணை | இன்புறு |
| நட்பு | இடுக்கண் | உடுக்கை |

பல்லாண்டுகளுக்கு முன்பு ஸிஸிலி என்னும் நாட்டிற்கு ஸைரக்யூஸ் என்பது தலைநகராக இருந்

தது. அதில் தியோனிஸ் என்ற அரசன் ஆட்சி செய்து வந்தான். அவன் கொடுங்கோலன்; குற்றம் செய்யாதவர்களைத் தண்டிப்பான். பெருங்குற்றம் செய்தோர்களை மன்னிப்பான்.

அவன் ஆண்டு வந்த நாளில் தாமன் என்ற பெயருடைய ஒரு மந்திரவாதியும் வாழ்ந்துவந்தான். அவனை யாவரும் மதித்தனர். ஒருநாள் ஏதோ ஒரு காரணத்தினால் தாமன் அந்த முறையற்ற அரசனது சினத்திற்கு ஆளானான். அவ்வரசன் அவனுக்கு மரண தண்டனை விதித்துத் தூக்கில் இட உத்தர விட்டான். தாமனுடைய மனைவி, குழந்தைகள், உறவினர் யாவரும் அந்தத் தலைநகரத்திற்குப் பல கல் தொலைவில் இருந்த ஓர் ஊரில் வாழ்ந்து வந்தனர். அந்தப் புரவலனால் மரண தண்டனைக்கு உள்ளாகிய தாமன், தன் மனைவி மக்களையும், சுற்றத் தாரையும் காண விரும்பி, அவ்வரசனை அணுகி அனுமதி வேண்டினான். எந்த நாளில் மரண தண்டனை அடைய வேண்டுமோ அன்று வருவதாக வாக்குச் செய்தான்.

அதைக் கேட்ட கொற்றவன் மந்திரவாதியை நோக்கி 'உன் சொல்லை எவ்வாறு நம்ப முடியும்? நீ குறிப்பிட்ட நாளில் வரத் தவறினால் என்ன செய்வது? ஆதலால், உனக்குப் பதிலாக வேறு ஒருவனை இங்கு நிறுத்திவிட்டுப் பிறகு செல்ல வேண்டும். இதற்கு நீ இசைந்தால் நான் உனக்கு ஊருக்குப் போய் வர அனுமதி அளிப்பேன்,' என்று கூறினான்.

அச்செய்தியைக் கேள்வியுற்ற தாமனின் நண்பனான பிதியஸ் 'ஆபத்துக் காலத்தில் உதவு

கின்றவனே உண்மையான நண்பன்' என்று உறுதி செய்தான். அவனுக்குத் தெரியாமல் தானுகவே அரசனிடம் சென்று 'நண்பனுக்குப் பதில் நான் இருக்கிறேன்' என்ருன். காவலன் அதற்கு இசைந்து தாமனை ஊருக்குச் சென்று வருமாறு உத்தரவிட்டுப் பிதியஸைச் சிறையில் அடைத்தான்.

தாமன் உயிர் நண்பன் உதவியால் மனைவி மக்களைக் கண்டு இன்புற்ருன். தூக்கில் இடக் குறித்த நாள் வந்தது. தாமன் தலைநகர் வந்து சேர வில்லை. ஆதலால் அரசன் சிறைக் கூடம் சென்று பிதியஸைப் பார்த்துச் செய்தியைக் கூறி 'நீ என்ன சொல்லுகிருய்?' என்று கேட்டான். பிதியஸ் சிறிதும் தயக்க மின்றித் தன்னையே தூக்கி விடும்படி கூறினுன்.

மாலை நேரம் வந்தும் தாமன் வர வில்லை. காவலன் ஆணைப்படி பிதியஸ் தூக்கு மேடையை நெருங்கினுன். அந்நகர மக்கள் வருந்தினர். அவ்வமயம் பிதியஸ் கொலையாளிகளைப் பார்த்து 'இனித் தாமதம் செய்யாது தாமன் வருமுன் தூக்கில் இடுங்கள். நண்பனுக்காக உயிர் விட்ட புகழ் எனக்கு வரட்டும்' என்று மகிழ்ச்சியாக மொழிந்தான். அங்குள்ளோர் மிக வியந்தனர்.

உடனே கொலையாளிகள் பிதியஸைத் தூக்கு மரத்தில் ஏற்றிக் கழுத்தில் கயிற்றை மாட்டி இழுக்கலுற்றனர். திடீரென்று 'நிறுத்துக! நிறுத்துக! தூக்கில் இடுவதை நிறுத்துக!' என்ற ஒலி எல்லார் காதுகளிலும் பலமாக வந்து விழுந் தது. அவ்வொலி எங்கிருந்து வந்தது என்று எல்லோரும் நாற்புறமும் பார்க்க, குதிரையின் மீது

வாயுவேகம் மனோவேகமாக வந்து குதித்தான் தாமன். ஓடி உயிர் நண்பனைக் கட்டித் தழுவினான். "நண்பனே! சிறிது நேரம் கால தாமதம் ஏற்பட்டிருப்பின், எனக்காக நீ உயிரை இழந்திருப்பாயே! பெரும்பாவம் என்னை அடையுமே! கடவுள் ஆற்றலே பெரிது,' என்று கண்ணீர் ததும்பக் கூறினான்.

அந்நிகழ்ச்சிகளைக் கண்ட அரசன் தியோனிஸ், அவர்களது உயர் நட்பை வியந்து, இரங்கி, அவ்விரு நண்பர்களைப் பிரிக்க மனம் இன்றி, தாமனுக்குரிய தண்டனையை மன்னித்து விடுவித்தான்.

இன்புறும்போது இன்புற்றும் துன்புறும்போது உதவியும் பழகுபவர்களே உயிர் நண்பர்களாவார்கள். தாமன் தனக்காக உயிரையும் கொடுக்கச் சித்தமாயிருந்த நண்பன் பிதியஸுக்கு நன்றியுடையனாக இனிது வாழ்ந்துவந்தான்.

"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு." —திருக்குறள்.

அருஞ்சொற் பொருள்

புரவலன் = அரசன்; அளிப்பேன் = கொடுப்பேன்; ஆணை = கட்டளை; நாற்புறமும் = நான்கு பக்கமும்; இடுக்கண் = துன்பம்; உடுக்கை = ஆடை.

வினாக்கள்

1. ஸிஸிலியின் தலைநகர் எது?

2. ஸிஸிலியை ஆண்ட அரசன் யார்? அவன் இயல்பு யாது?

3. தாமன் தண்டிக்கப்பட்டது ஏன்?

4. தாமனின் விருப்பம் என்ன? அது நிறைவேற்றப் பட்டது எங்ஙனம்?

5. தாமனும் பிதியசும் விடுதலை பெறக் காரணம் என்ன?

### இலக்கணம்

"உன் சொல்லை எவ்வாறு நம்பமுடியும்," என்று அரசன் கூறினன். "சித்திரை மாதப் புழுதி பத்தரை மாற்றுத் தங்கம்" என்பர் சான்றோர்.

பிறர் பேசும் சொற்களையும், சான்றோர் சொன்னதாகக் கூறப்படும் சொற்களையும் அப்படியே எழுதும்போது மேற்கோள் குறியிட்டு ("        ") எழுத வேண்டும்.

## 31. செந்தமிழ் நாடு

1. செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன்வந்து பாயுது காதினிலே!—எங்கள்
தந்தையர் நாடென்ற பேச்சினிலே—ஒரு
சத்தி பிறக்குது மூச்சினிலே!

2. காவிரி தென்பெண்ணை பாலாறு—தமிழ்
கண்டதோர் வையை பொருனை நதி—என
மேவிய ஆறு பலவோடத்—திரு
மேனி செழித்த தமிழ்நாடு!

3. நீலத் திரைக்கட லோரத்திலே நின்று
நித்தம் தவஞ்செய் குமரிஎல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடை யேபுகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு!

4. கல்வி சிறந்த தமிழ் நாடு—புகழ்க்
 கம்பன் பிறந்த தமிழ் நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின்—மணம்
 பாரெங்கும் வீசுந் தமிழ் நாடு!

5. வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
 வான்புகழ் கொண்ட தமிழ் நாடு!—நெஞ்சை
யள்ளும் சிலப்பதி காரமென்றோர்—மணி
 யாரம் படைத்த தமிழ் நாடு!

அருஞ்சொற் பொருள்

*பாயுது = பாய்கின்றது; சத்தி = ஆற்றல்; மேவிய = பொருந்திய; திரை = அலை; மாலவன் குன்றம் = திரு வேங்கட மலை.*

வினாக்கள்

1. *தமிழ் நாட்டில் ஓடும் ஆறுகள் எவை?*

2. *தமிழ் நாட்டின் எல்லை யாது?*

3. *தமிழ் நாட்டு அறிவு மேன்மை விளக்கப்படுதல் எவ்வாறு?*

# 32. மனோன்மணி

| | | |
|---|---|---|
| நேசித்து | வஞ்ச நெஞ்சம் | உரிமையாக்குக |
| குலகுரு | ஈடேற | ஈடுபடுமாறு |
| நல்வாழ்விலும் | கோட்டை | உயிர்க்காப்பாளர் |
| சூழ்ச்சி | நால்வகைப் படை | சின்னபின்னமாக |
| பாசறை | விலங்கு | பேராசிரியர் |

முன்னொரு காலத்தில் சீவகவழுதி என்ற பாண்டி மன்னன் மதுரையை ஆண்டு வந்தான்.

இவன் தன் மனைவியை இழந்த பிறகு, தன் ஒரே மகள் மனோன்மணியை மிக அன்பாகவும் செல்வமாகவும் தன் உயிரைக் காட்டிலும் சிறப்பாகவும் நேசித்து வளர்த்து வந்தான்.

சுந்தர முனிவர் என்பவர் அரசனின் ஆசிரியர்; குல குருவும் ஆவர். இவர் பாண்டியனிடமும், மனோன்மணியினிடமும் அன்பு கொண்டு, அடிக்கடி அவர்களைக் கண்டு அறிவுரைகள் கூறுவதோடு, அவர்களது நல்வாழ்விலும் நோக்கம் கொண்டவராய் இருந்தார்.

குடிலன் என்பவன் பாண்டி நாட்டு முதல் அமைச்சன்; சூழ்ச்சி நிறைந்தவன்; பாண்டி நாட்டு அரசாட்சியைக் கைப்பற்ற வேண்டுமென்ற தீய எண்ணம் கொண்டவன். அவன் தன் மகன் பலதேவனுக்கு மனோன்மணியைத் திருமணம் செய்து வைத்துவிட்டால் பாண்டி நாட்டு அரசைப் பெற்று விடலாம் என்று எண்ணியிருந்தான்.

இந்த வஞ்சக நினைவோடு, அரசனிடம் மிகுந்த அன்பும் பற்றும் உடையவன்போல் பழகினான். இவன் வஞ்ச நெஞ்சத்தை அறியாத அரசன் இவனை நல்லவன் என்றே நம்பினான். ஆதலால் குடிலன் தன் எண்ணம் ஈடேற வேண்டிய ஏற்பாடுகளைப் பிறர் அறியாதவாறு செய்து கொண்டே இருந்தான்.

மதுரையைத் தலைநகராகக் கொண்டு அங்கேயே இருப்பின் தன் சூழ்ச்சி நிறைவேறாது என்று எண்ணிய குடிலன், திருநெல்வேலியில் இருந்த பழைய கோட்டையைப் புதுப்பித்தான். அரசர்,

படைத் தலைவர், நால்வகைப் படை, மற்ற அரசியல் அலுவலகத்தாராகிய யாவரையும் அங்கு அனுப்பி, அதனைத் தலைநகராகச் செய்தான்.

வஞ்சகனான குடிலன், தன் மகன் பலதேவனைச் சேர மன்னனான புருடோத்தமனிடம் தூது அனுப்பினான். அவன் அங்குச் சென்று 'சேர நாட்டின் தென் பகுதியாகிய நாஞ்சில் நாடு பாண்டியரைச் சேர்ந்தது. அதை உடனே பாண்டியனுக்கு உரிமையாக்குக. இல்லை யெனில் போர் மூளும்' என்று சேர மன்னனிடம் கூறினான். அது கேட்டுச் சினம் கொண்ட சேரன் 'பாண்டி நாட்டின்மீது படை யெடுத்து வருவதாக உன் அரசனிடம் சொல்' என்று கூறியனுப்பினான்.

எதிர்பார்த்த போர் மூண்டது. குடிலன் மனம் மகிழ்ச்சியுற்றது. அவன் முதல் நாட் போரிலேயே அரசனைக் கொல்லச் சூழ்ச்சி செய்தான். அரசனுக்குத் துணையாக ஒருவரையும் நெருங்கவிடாமல் வீரர்களைப் பல இடங்களில் போரில் ஈடுபடுமாறு செய்தான். செய்யினும், நாராயணன் நடராசன் என்ற இரு உயிர்க்காப்பாளர்மட்டும் அரசன் உயிரைக் காப்பாற்றுவதில் முனைந்து நின்றனர். இருப்பினும் பாண்டியர் சேனை நிலை தளர்ந்து தோற்றது. கோட்டையின் பல பகுதிகள் சின்னபின்னமாக்கப்பட்டன. மறுநாள் சண்டையில் தோல்வியே கிட்டும் என்று சீவகவழுதி அறிந்தான். தான் போரில் உயிரிழந்தால் தன் ஒரே மகளின் நிலை யாதாகுமோ என்று வருந்தினான்.

வஞ்சகமே ஓர் உருவமான அமைச்சன் குடிலன், மனோன்மணிக்கும் பலதேவனுக்கும் திருமணம்

செய்வித்தலே நலம் என்று யோசனை கூறினான். பாண்டியனும் இசைந்தான்.

உடனே திருமண ஏற்பாடுகள் நடைபெறத் தொடங்கின. அவ்வமயம் குடிலன் ஒரு சுரங்க வழியாகச் சேரனின் பாசறையை அடைந்து அவனிடம் 'பாண்டி நாட்டு அரச பதவியை எனக்குத் தருவதாக முடிவு செய்யின் பாண்டியனைப் பிடித்துத் தருகிறேன்' என்றான். புருடோத்தமன் உடனே குடிலனைச் சிறைப்படுத்தி, அவனே வழி காட்ட, சுரங்கத்தின் வழியே சென்று, பாண்டியன் இருக்கும் இடத்தை அடைந்தான். சேர அரசனை யும், விலங்கு தாங்கிய தனது அமைச்சனையும் பாண்டியன் கண்டான்; குடிலனின் வஞ்சகச் சூழ்ச்சிகளை அறிந்தான். பின் அதே இடத்தில் சேரனுக்கும் மனோன்மணிக்கும் திருமணம் நடந் தது. குடிலனும் பலதேவனும் தண்டிக்கப்பட்ட னர்.

மாணவர்களே! இவ்வரலாற்றைப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை நாடகமாக எழுதித் தமிழ் உலகிற்கு அளித்துள்ளார். பல வகைச் சுவைகளும் பெற்று விளங்குகின்ற இந்நாடக நூலை நீங்கள் உயர்நிலை வகுப்புகளிற் படித்து இன்புறுவீர்கள்.

அருஞ்சொற் பொருள்

சூழ்ச்சி = தந்திரமாகப் பிறர் நல்வாழ்வைக் கெடுத்தல்; ஈடேற = வெற்றிபெற; முனைந்து = முழுமுயற்சியுடன்; பாசறை = போர்க்களத்தில் அரசன் தங்கும் இடம்; நால் வகைப்படை = காலாள், யானை, குதிரை, தேர் என்ற நான்கு வகைப் படைகள்; சின்னபின்னமாக = உருவில் லாமல்.

## இலக்கணம்

(1) 'மலைக் கோவில்கள் பின்வரும் ஊர்களில் உள்ளன' என்று இவ்வாறு வரும் இடங்களிலும், (2) 'கீழ்வரும் செய்திகளைக் கவனிக்கவும்' என வரும் இடங்களிலும், (3) உரையாடற் பகுதியில் பேசுவோர் பெயரை அடுத்தும் (:) இக்குறி இடப்படும். இது முக்காற் புள்ளி எனப்படும்.

(!) இது வியப்புக் குறி எனப்படும். வியப்பும் உணர்ச்சியும் காணும் இடங்களில் இஃது இடப்படும்.

பின் வரும் வாக்கியங்களில் தகுந்த இடங்களில் காற் புள்ளி, முற்றுப் புள்ளி, வினாக் குறி, வியப்புக் குறிகளை அமைக்க:

1. ஆ இஃது எவ்வளவு அழகான பறவை

2. நல்ல சாதி மாடுகள் மைசூர் கராச்சி கத்தியவார் குண்டூர் ஹொசூர் என்ற இடங்களில் வளர்க்கப்படுகின்றன

3. மாணவர்களே ரேடியோ என்று வழங்கப்படும் வானொலிப் பெட்டியை நீங்கள் கண்டிருக்கிறீர்கள் அல்லவா

4. இஃது என்ன வியப்பு

# செய்யுட் பகுதி

## 1. நல்வழி

1. ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா(று)
ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராஞலும்
இல்லையென மாட்டார் இசைந்து.

2. ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்
இருநாளைக் கேலென்றால் ஏலாய்—ஒருநாளும்
என்னே வறியாய் இடும்பைகூர் என்வயிறே
உன்னேடு வாழ்தல் அரிது.

3. நீரும் நிழலும் நிலம்பொதியும் நெற்கட்டும்
பேரும் புகழும் பெருவாழ்வும்—ஊரும்
வருந்திருவும் வாழ்நாளும் வஞ்சமிலார்க்(கு) என்றும்
தருஞ்சிவந்த தாமரையாள் தான்.

4. பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்(கு)
ஆவிதான் போயினபின்(பு) ஆரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம்.

5. மரம்பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி
இரந்தழைப்பார் யாவருமங் கில்லை—சுரந்தமுதம்
கற்ரு தரல்போல் கரவா(து) அளிப்பரேல்
உற்ருர் உலகத் தவர்.

6. வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்தில்
பட்டுருவும் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாரைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்.

7. சாதி இரண்டொழிய வேறில்லை; சாற்றுங்கால்
நீதி வழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர்; இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ள படி.

8. ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்(கு) ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

9. ஆன முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டுப்—போனதிசை
எல்லார்க்கும் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாம் நாடு.

10. ஆறிடும் மேடும் மடுவும்போல் ஆம்செல்வம்
மாறிடும் ஏறிடும் மாநிலத்தீர்,—சோறிடும்
தண்ணீரும் வாரும்; தருமமே சார்பாக
உண்ணீர்மை வீறும் உயர்ந்து.

—ஔவையார்.

'ஔவை' என்ற பெயரில் பெண்பாற் புலவர் இருவர் அல்லது மூவர் இருந்தனர் எனத் தெரிகிறது. அவருள் பிற்காலத்தில் வாழ்ந்த ஔவையே நல்வழி, வாக்குண்டாம், ஆத்திச்சூடி, மூதுரை என்ற நூல்களைச் செய்தவர்.

1. பெருக்கு = வெள்ளம்; அற்று = இல்லாமல்; ஊட்டும் = உண்பிக்கும்; ஏற்றவர் = யாசிப்பவர்; நல்கூர்ந்தார் = ஏழைகள்.

2. ஒழி = விட்டுவிடு; ஏல் = ஏற்றுக்கொள்; நோவு = துன்பம்; இடும்பை = தொல்லை; கூர் = மிகுந்த; அரிது = அருமையாகும்.

3. பொதியும் = மூடிய; திரு = செல்வம்; என்றும் = எக்காலத்திலும்; சிவந்த தாமரையாள் = செந்தாமரைப் பூவில் வாழும் இலக்குமி.

4. கூடு = உடம்பு; ஆவி = உயிர்.

புதைத்து வைத்த பணம் எவர்க்கும் பயனின்றிப் போய்விடும் என்பது கருத்து.

5. இரந்து = கெஞ்சி; கன்று + ஆ = கற்று, கன்றினை உடைய பசு; கரவாது = ஒளியாது; உற்றார் = நண்பர்.

6. வெட்டெனவை = கடுமையாகப் பேசும் சொற்கள்; மெத்தெனவை = இனிமையாகப் பேசும் சொற்கள்; வேழம் = யானை; கோல் = அம்பு; நெட்டிருப்புப்பாரை = நீண்ட கடப்பாரை; நெக்குவிடா = நெகிழாத.

இனிய சொற்களால் எல்லாரையும் வெல்லலாம் என்பது கருத்து.

7. சாற்றுங்கால் = சொல்லுமிடத்து; மேதினியில் = பூமியில்; இட்டார் = ஏழைக்களுக்குக் கொடுத்தவர்; பட்டாங்கில் = உலக வழக்கில் சாத்திரத்தில்.

8. ஏற்றம் = உயர்வு; பழுது = அழிவு; பணி = தொழில்.

9. ஆனமுதலில் = கிடைக்கும் வருவாயில்; நாடு = ஆராய்ந்து பார்; மதிகெட்டு = அறிவு அழிந்து.

10. ஆறிடும் மேடு = ஆற்று வெள்ளத்தினால் ஏற்படும் மேடு; மடு = பள்ளம்; வாரும் = வற்றும்; சார்பு = துணை; உள் நீர்மை = மனத் தூய்மை; வீறும் = மேம்படும்.

## 2. நீதிவெண்பா

1. தாமரைபோன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகும் சவ்வா(து)—ஆம்அழன் மற்(று)
எங்கே பிறந்தாலும் எள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என்.

2. பகைசேரும் எண்ணென்கு பற்கோண்டே நன்று
வகைசேர் சுவையருந்து மாபோல்—தோகைசேர்
பகைவரிடம் மெய்யன்பு பாவித்(து) அவரால்
சுகமுறுதல் நல்லோர் தொழில்.

3. செய்யும் ஒருகருமம் தேர்ந்து புரிவதன்றிச்
செய்யின் மனத்தாபம் சேருமே—செய்யவோரு
நற்குடியைக் காத்த நகுலனைமுன் கோன்றமறைப்
போற்கோடியைச் சேர்துயரம் போல்.

4. ஈக்கு விடந்தலையில் எய்தும் இருந்தேளுக்கு
வாய்த்த விடம்கோடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே தூர்ச்சனருக்(கு)
அங்கமுழு தும்விடமே யாம்.

5. சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர் ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மோழியாரே—வெற்றிபெரும்
வேண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும்போன்
ஒண்கலத்தில் உண்டோ ஒலி.

6. தேன்புலத்தார் தேய்வம் விருந்(து) ஒக்கல் என்றிவரோ(டு)
இன்புறத்தான் உண்டல் இனிதாமே—அன்புறவே
தக்கவரை யின்றித் தனித்துண்டல் தான்கவர்மீன்
கோக்கருந்தல் என்றே குறி.

7. போற்பறிவில் லாதபல புத்திரரைப் பேற்றலின்ஓர்
நற்புதல்வ னைப்பேறுதல் நன்றுமே—போற்கோடியே!
பன்றிபல குட்டி பயந்ததனால் ஏதுபயன்
ஒன்றமையா தோகரிக்கன்(று) ஓது.

8. தாமுங் கோடார்கோடுப்போர் தம்மையும் ஈ யாதவகை
சேமஞ்செய் வாரும் சிலருண்டே—ஏமநிழல்
இட்டுமேலர் காய்கனிகள் ஈந்துதவு நன்மரத்தைக்
கட்டுமுடை முள்ளனவே காண்.

9. போன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து.

10. பாலின்நீர் தீயணுகப் பால்வேகுண்டு தீப்புகுந்து
மேலும்நீர் கண்டமையும்மேன்மைபோல்—நூலி(ன்)
உற்றோர் இடுக்கண் உயிர்கோடுத்தும் மாற்றுவரே [நேறி
மற்றோர் புகல மதித்து.

1. சவரம் = கவரி; பூமருதேன் = பூவில் பொருந்தியுள்ள தேன்; ஆம் அழல் = எரிகின்ற நெருப்பும்; எள்ளார் = உலகத்தார் இகழார்.

2. நன்னு = நல்நா = நல்ல நாக்கு; வகைசேர் = பல வகையான; சுவை = சுவையான பொருள்கள்; அருந்துதல் = உண்ணுதல்; பாவித்து = வைத்து.

3. தேர்ந்து = ஆராய்ந்து அறிந்து; நற்குழவியை = நல்லகுடிவளரக் காரணமான குழந்தையை; நகுலன் = கீரிப்பிள்ளை; மறைப்பொற்கொடி = பார்ப்பனப் பெண்.

4. விடம் = நஞ்சு; வாய்த்த = பொருந்திய; அங்கம் = உடல்; பைங்கண் = பசிய கண்களையுடைய.

5. சிற்றுணர்வோர் = சிற்றறிவினையுடையவர்; ஆன்று = கல்வி கேள்விகளால் நிறைந்து; முற்றுணர்வோர் = அறிவிற் சிறந்த சான்றோர்.

6. தென்புலத்தார் = பிதிரர், இறந்தபின் தென் திசையில் ஓர் இடத்தே வாழ்கின்றவராகக் கொள்ளப்படுபவர்; ஒக்கல் = சுற்றத்தார்; தக்கஅவர் = தகுந்த அந்நால்வரும்; குறி = நீ கருது.

7. பொற்பு அறிவு = சிறந்த அறிவு; நன்று ஆம் = நன்மையாகும்; கரி = யானை.

8. சேமம் = காவல்; ஏமம் = இனிய; உடைமுள் என = உடைவேல் முள்ளைப்போல.

9. சின்னம்பட = தம் நிலைக்கு அழிவு ஏற்படும்படி; நலிந்தாலும் = துன்புற்றாலும்; நயந்து = சிறந்து.

10. வெகுண்டு = கோபித்து; தீ புகுந்து = பொங்கி நெருப்பை அணைத்து; அமையும் = அடங்கும்; மாற்றுவர் = போக்குவர்; புகல = புகழ்ந்து பேசும்படி.

## 3. சதகங்கள்

### 1. குறிப்பு அறிதல்—குமரேச சதகம்

மனத்தில் கடும்பகை முகத்தினுல் அறியலாம்;
　　மாநிலப் பூமேக ளேலாம்
மழையினுல் அறியலாம்; நல்லார் பொல்லார்தமை
　　மக்களால் அறியலாகும்;
கனமருவு சூரரைச் சமரினுல் அறியலாம்;
　　கற்றஒரு வித்து வானை
கல்விப்பிர சங்கத்தினுல் அறியலாம்; குணங்களை
　　நடையினுல் அறியலாம்;
தனது அகம் அடுத்தது பளிங்கினுல் அறியலாம்;
　　சாதி சொல்லால் அறியலாம்;
தருநீதி கேள்வியால் அறியலாம்; பிணிகளைத்
　　தாதுக்களால் அறியலாம்;
வனசவிக சிதவதன பரிபூர ஞானந்த
　　வால வடிவான வேலா!
மயிலேறி விளையாடு குகனே! புல் வயல்நீடு
　　மலைமேவு குமரேசனே.

### 2. பலருக்கும் உதவிசெய்தலே சிறந்த அறம்—தண்டலையார் சதகம்

தன்மமதைச் செயல்வேண்டும்; தண்டலைநீள்
　　நெறியாரே தயவு செய்வார்;
வன்மவினை செயல்வேண்டாம், பொய்வேண்டாம்,
　　பிறரை ஒன்றும் வருத்தல் வேண்டாம்;
கன்மநெறி வரல்வேண்டாம்; வேண்டுவது
　　பலர்க்கும் உபகார மாகும்;
நன்மை செய்தார் நலம்பெறுவர் தீமைசெய்தார்
　　தீமைபெற்று நலிவர் தாமே.

## 3. மூர்க்கன் முதலியோரின் தன்மைகள்—திருவேங்கட சதகம்

மெய்யான புத்திபல சொல்லினுந் தன் புத்தி
மேலாகி னேன்மூர்க்கனும்
மிக்கபெரியோர்களைத் தாழ்வுசெய்து அற்பர்தமை
மேன்மைசெய் வோன்மூடனும்
செய்யாத காரியம தேனினும்பி டித்தபிடி
செய்யுமவ னேதுட்டனும்
திரளான நன்றிபல செய்தவர்க் கேயிடர்கள்
செய்பவன் மாபாதகன்
ஐயா வேனப்பணிந் தாலுமே கோபமது
அடங்காத வன்குரூரன்
அனுதினந் தீமைபுரி வோனெந்த நாளிலும்
அடங்காத சண்டாளனும்
மையார் தடஞ்சோலை திகழ்கின்ற களமூரில்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமணவாளனே!
வரதவேங் கடராயனே.

குறிப்புரை:

[*சதகம், நூறு பாடல்களைக்கொண்ட ஒரு நூல். சதம் = நூறு.*]

1. *பூடு = புல்பூண்டு முதலியன; கனமருவு = சிறந்த; சமர் = போர்; பிரசங்கம் = சொற்பொழிவு; நடை = ஒழுக்கம்; தாது = நரம்பு; வனசம் = தாமரை; விகசித = மலர்ந்த; 'வனச விகசித வதனம்' = விகசித வனச வதனம் = மலர்ந்த தாமரைபோன்ற முகம்; பரிபூரணம் = நிறைவு; பிணி = நோய்.*

2. *தன்மம் = அறம்; தண்டல் ஐ நீள் நெறியார் = அமைதியான அழகிய பெருமை வாய்ந்த வழியில் செல்பவர்; வன்மம் = வைராக்கியம்; கன்மம் = பாவம்; நலிவர் = துன்புறுவர்.*

3. *அற்பர் = கீழ்மையான குணமுடையோர்; திரள் = தொகுதி; இடர் = துன்பம்; குரூரன் = கொடியவன்; அனுதினம் = நாள்தோறும்; மை ஆர் = மேகங்கள் பொருந்திய; தடம் = விசாலமான; திகழ்கின்ற = விளங்குகின்ற.*

## 4. தேசிங்குராஜன் கதை

### இராஜா தேசிங்கு பாராசாரியை அடக்குதல்

*[தன் நண்பன் மோவுத்துக்காரனுடன் தேசிங்கு டில்லிக்குப்போய் அரசரைப் பார்த்தல்]*

அண்ணவாடா தம்பிவாடா
மோவுத்துக்காரா நீ;
தெய்வ லோகத்துப் புரவியொன்று
டில்லியி லிருக்குதாம்
எனது தகப்பன் தேரணிராஜன்
அங்கே இருக்கிறராம்
குதிரை யேறிச் சவாரிசெய்து
கொண்டு வரவேணும்

சல்தி சல்தி புறப்படுமென்றன்
மோவுத் துக்காரனை
கொட்டடி சென்று குதிரையிரண்டு
கொண்டு வந்தானும்
பத்துநாளை யிலேவந்து சேர்ந்தார்
பாலர் இருவருந்தான்
டில்லிசேர்ந்து தெருவில் நடந்தான்
தேசிங்கு பாலகனும்
சிங்கார மாளிகை வந்து சேர்ந்தான்
சிங்கக் குட்டி போலே

அவ்வேளையில் என்ன செய்கிறன்
டில்லிப துரைதானும்
தங்கத்தகத்தில் இருந்தே அரசு
தனிமையாய்ச் செய்கிறனும்
அந்தச் சமயம் வந்து நின்றன்
அலறும் சிங்கம்போல!
சலாமையா! சலாமையா!
டில்லிப துரையே கேள்;
தெற்கே வெகுதூரமிருக்குது
பாரு செஞ்சிக்கோட்டை

செஞ்சிக்கோட்டை யாளும் ராஜன்
தேரணி மகாராஜன்
தேரணிராஜன் குமாரன் நான்
தேசிங்கு மகிபாலன்
குதிரையேறிச் சவாரி செய்து
கொண்டுபோக வந்தேன்
சல்தி சல்தி குதிரை கொண்டுவா
டில்லிப துரையே நீ;
ஓடிவந்த ராஜனைக் கண்டு
உதைத்து எழுந்தது பார்;

கோட்டை யிடிந்து விழுந்தாற்போல
துலுங்கக் கனைத்தது பார்;
கனைத்த குதிரையைக் கண்ணாலே கண்டு
கடுகே ஓடிவந்தான்
குதிரையைத் தட்டிச் சலாம் வாங்கினான்
கொல்லும் சிங்கம்போல
அண்ணாவாடா தம்பிவாடா
மோவுத்துக்காரா நீ;
கால் கயிற்றைக் கழுத்துக் கயிற்றைக்
கடுக அவிழுமென்றான்.

அந்தச் சொல்லைக் காதிலே கேட்டான்
மோவுத்துக் காரனும்
சொன்னவுடனே சல்தியாய்ப் பார்த்துச்
சுருக்காய் எழுந்தானும்
தங்கத்தாலே சீனி போட்டுத்
தடவிக் கொடுத்தானும்
அந்தக் குதிரையைக் கண்ணாலே கண்டு
அகம கிழ்ந்தானும்
புலிக்குட்டிபோலப் பாய்ந்து அவனும்
புரவி யேறினானும்

ஏறினவுடனே பாராசாரி
என்ன செய்யுது பார்;
தடதட தடதட தடதடவென்று
தவிக்குதுபார் குதிரை

கிடகிட கிடகிட கிடகிடவென்று
 கிளம்பிக் குதிக்குது பார்
லகானை இழுத்துக் கையிலே பிடித்தான்
 ராஜா தேசிங்கு
லகானை இழுத்துச் சிமிட்டாக் கொடுத்தான்
 ராஜா தேசிங்கு



35. சிமிட்டாக் கொடுத்த வேகத்தினாலே
 சீறிப் பாய்கிறது
காடு மலைகள் செடிகளெல்லாம்
 கலங்கி நடுங்கிடவே
குன்று மலைகள் தாண்டிக் குதிரை
 குதித்துப் போகிறதாம்
குதிரை தட்டின வேகத்தாலே
 குழந்தை தேசிங்கு
குலுங்க நகைத்துச் சிமிட்டாக் கொடுத்தான்
 குதிரைக்காரனும்
40. அங்கிருந்தே குதிரையைத் திருப்பினான்
 அந்தப் பாலகனும்
பாராசாரி மனது கலங்கிப்
 பார்த்து நிமிர்ந்ததுபார்

பார்த்த உடனே தேசிங்கு பாலன்
புரவியை என்ன செய்தான்
மெள்ள சிமிட்டாக்கொடுத்து
மெதுவாய் வாரானே
பக்கம் சிமிட்டாக் கொடுத்துப்
பாலன் வாரானே

45. கலகல கலகல கலகலவென்று
கனைத்து வருகுதுபார்
அந்தச் சமயத்தில் வந்து நிறுத்தினன்
அந்தப் பாலகனும்
பாராசாரியைக் கொண்டுநிறுத்தினன்
பால சூரியன்போலே
நிறுத்தின உடனே புட்பமாரி
நிலையாய்ப் பொழிந்தாராம்.

குறிப்புரை:—

2. *புரவி = குதிரை; 3. சல்தி = வேகமாக; 9. சிங்காரம் = அழகு; 24. கடுக = விரைவாக; 44. சிமிட்டா = அடி.*

## 5. கட்டபொம்மன் பாட்டு

*[காலன் துரை எட்டயாபுரத்துத் தானுபதியை அழைத்து "ஏதாவது சேதிகள் உண்டா" என்று கேட்க அவன் சொல்கிறன்.]*

1. கட்டமன் என்றவன் பேரு சொன்னல்—இன்னும்
கள்ளர்கள் தண்ணீர் குடியார்கள்
கட்டம் நாயக்கன் மூணுநாள் வரைக்கும்
எதிர்த்து நிற்கவும் வல்லவன்தான்

2. கோபமுள்ள வீரன் கட்டமன்மேல் போனல்
கொல்லாமல் சும்மா விடமாட்டான்
கவுலாய்க் காயிதம் எழுதியபின்—அவனைக்
கைப்பிடியாகப் பிடிக்க வேணும்.

3. காலன் துரையும் பிற்கட்கு மேஜரும்
கமிட்டி கூடி அழைச்சுப் பேசினார்
கமிட்டி கூடி அழைச்சுப் பேசி—துரை
கண்டிச்சு எழுதினான் காயிதமும்

4. என்னவென்று சொல்லிக் கவுலுக் காயிதம்
எழுதினான் கட்ட பொம்மனுக்கு
கேவுர்னர் உடைய மத்திசந்தான்—வாதி
காலன் துரையது மத்திசந்தான்.

5. என்னுட மத்திசம் கட்டபொம்மா!—நீ
இங்கே வரணும் சந்திப்புக்கு
சந்திப்பு வந்தென்னைக் கண்டு கொண்டால்—சீமை
அஞ்சில் ஒருபங்கு வாரமடா!

6. அஞ்சிலே ரெண்டு வாரமடா—நீ
கும்பினிக்குப் பெத்த பிள்ளையடா!
இல்லாதே போனாலே கட்டபொம்மா—உங்கள்
எல்லோரையும் தூக்கில் போட்டிடுவேன்.

7. நாளையஞ்சு மணிக்(கு) எல்லாம் உன்கோட்டையை
அலறப் பண்ணுவேன் கட்டபொம்மா!
எழு மணிக்(கு) எல்லாம் உந்தன் கோட்டையை
இடிக்கிறேன் பாரடா கட்டபொம்மா!

8. கோட்டையை இடித்துப் பிடித்து இன்னும்
கொண்டுபோய்த் தூக்கிலே போட்டிடுவேன்
கேள்விப் பேச்சுகள் கேளாதே வீணாய்க்
கெட்டுப்போகாதே கட்டபொம்மா!

9. குள்ளேலிக் கூட்டமும் உந்தனோடே வந்து
கூடக் குதிப்பாரா கட்டபொம்மா!
பெருநெருப்புடன் எதிர் பாவிச்சு இன்னம்
முடியப் போகுதோ கட்டபொம்மா!

10. இந்தப் பட்டாளம் செத்து ஒழிந்தாலும்—அது
இளைப்பு நாய்க்குச் சமானம் அடா!
இன்னும் என்னைப்போல் துரைமார்கள் எத்தனை
இருக்கிறார்கள் சென்னைப் பட்டணத்தில்!

11. உன்னைப்போலே பரிசுத்த வீரமும்—வேறு
ஒருவருக்கு இருக்குமோ கட்டபோம்மா!
நாலு சமுத்திரம் கைக்குள் இருக்குது
நன்றாய் அறிவாயே கட்டபோம்மா!

12. கேடு வரும்போது கட்டபோம்மா—ஒரு
கெடுமதி தோணுமே கட்டபோம்மா!
தம்பியும் உன்னுட தானுபதி வந்து
சந்திக்கத் தப்பாதே கட்டபோம்மா!

13. என்று சொல்லியே காயிதம் எழுதி
இச்சணம் கைமுத்திரை தான்போட்டு,
கையெழுத்தும் போட்ட காயிதம் அதனைக்
கலாசுக் காரரே கொண்டுபோனார்.

—கட்டபொம்மன் கும்மி.

2. கவுல் = வஞ்சகம், சூழ்ச்சி.

6. கும்பினி = வெள்ளைக்காரக் கம்பெனியைச் சேர்ந்தோர்.

7. அலற = கதறும்படி.

8. கெட்டுப்போகாதே = அழியாதே.

10. சமானம் = ஒப்பு.

11. பரிசுத்தம் = தூய்மை.

12. கேடு = அழிவு; கெடுமதி = கெட்ட அறிவு.

13. இச்சணம் = உடனே; கலாசுக்காரர் = காவல்காரன்.





